# எமிலி ஜோலா







தமிழ் மன்றம்

தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி

கலங்காது நீதிக்கு வாதாடிய நேர்மையாளன், எமிலி ஜோலாவின் வாழ்க்கை வரலாற்றினை வரைகோல் வேந்தர், சி. பி. சிற்றரசு அவர்கள் மன்றத்திற்கு வழங்கியதற்கு நமது நன்றி. இப்புத்தகம் உருவாகுங்கால் உடனிருந்து உதவிய திருச்சி E. R. உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் புலவர் S. அரங்கசாமி அவர்களுக்கும் என் நன்றி.

தமிழ் மன்றம்,
2—4—52.

இரா. இராசன்.

# தெரிந்துகொள்ள

உலக மக்களுககுப புரட்சிக் கருத்துக்களை அளித் துள்ள பிரான்சு நாட்டின் பெருமைக்கு அந்நாட்டின் பேனு வீரர்களும்-வாள் வீரர்களுமே காரணமானவர்கள் என்றால் மிகையாகாது.

பிரான்சு நாட்டின் புரட்சி எழுத்தாளரும, நதக கோட்டிலிருந்து வழுக்கி அநீதி என்னும் படுகுழியில் விழ இருந்த தனது தாய் நாட்டைத் தட்டி எழுப்பிச் சரியான பாதையில் செல்லுமாறு செய்த எமிலி ஜோலாவைப் பற்றி நான் எழுது~~வதாக என்னை அறியாமலே தமிழ்மன்ற உரிமை யாளர் தோழர் இராசன் விளம்பரப்படுத்திவிட்டார்.~~

அவர் விளம்பரத்துக்குப் பிறகு ~~எழுதவேண்டிய~~ கட்டாயம் வந்துவிட்டது. எமிலி ஜோலா எழுதிய பல நூல் களிலே, இன்னும் ஆங்கிலத்திலேயே மொழி பெயர்க்கப் படாமல் பல நூல்கள் இருக்கின்றன. ஆதலால் குறிப்பு களைச் சேகரிக்கப் பல தொல்லைகள் படவேண்டி வந்தது. இதே வேலையாக நானும், நண்பர் சிவப்பிரகாசம் B. A. அவர்களும், தோழர் இராசன் அவாகளும் சென்னைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திலும், கன்னிமாரா நூல் நிலை யத்திலும் ஏறி இறங்கினோம். பயனில்லை. ஜோலாவைப் பற்றி என்னிடம் என்னென்ன ஆங்கில நூல்கள் இருக் கின்றனவோ அவைதான் அங்கேயும் இருக்கின்றன. ஆகவே இறுதியாகப் புதுவைக்குச் சென்று அங்கிருக்கும் அரசி~~னாளர்~~ நூல் நிலையத்தில்தான் தேவையான செய்திகள் கிடைத்தன. அதுவும் பிரெஞ்சு மொழியில். அந்த நூல்

களை எல்லாம் நான் கேட்டவுடனே பெற்றுத் தந்த எனது நீண்ட நாளைய நண்பரும் பிரெஞ்சிந்திய முதலமைச்சருமான முசியே எதுவார்குபேர் அவர்களுக்கும், பிரெஞ்சு மொழியிலிருந்த அவற்றை ஐந்து நாட்கள் தொடர்ந்து, உட்கார்ந்து ஆங்கிலமாக்கித் தந்த புதுவைத் தோழர் வடிவேல், சேலம் V. சிவப்பிரகாசம் B. A. அவர்களுக்கும் என் நன்றி.

இவ்வளவு கஷ்டப்பட்டு சுமார் 500 ரூபாய்க்குமேல் செலவு செய்து கிடைத்த உண்மைகளை ஒன்றுவிடாமல் சொல்லவேண்டுமென்று என் அவா தூண்டியதால் இரண்டு பாகங்களாக எழுதித் தந்தேன். ஜோலாவின் வாழ்க்கை வரலாறு, டிரைபஸ் வழக்கு, ஜோலாவின் கடிதங்கள், ஜோலா அடைந்த தண்டனை, கொடியவர்கள் ஓட்டம், டிரைபஸ் விடுதலை, அன்றிருந்த அரசியல் நிலை, யூத ஆதரிப்பு, யூத எதிர்ப்பு இயக்கங்களின் தோற்றம் ஆகியவைகள் ஒன்றைவிடாமல் என்னாலியன்ற அளவு எழுதியிருக்கின்றேன். நண்பர்கள் படித்துப் பயன்பெறுவதன் மூலம் என் எழுத்துப்பணி ஊக்கம்பெறும் என்று நம்புகிறேன்.

சேலம்
20—3—52

உங்களன்புள்ள
**சி. பி. சிற்றரசு**

# எமிலி ஜோலா

## (முதற் பாகம்)

---

### கொடும்பாவி

என்ன கூட்டம் அங்கே? வா. வா போய்ப் பார்க்கலாம். எதையோ இழுத்துக்கொண்டு வருகின்றார்கள். சிறுபிள்ளைகள் விளையாட்டா? இல்லை, இல்லை பெரியவர்கள் சாதாரண மனிதர்களா? அவர்களோடு சில சீமான்களும் வருகின்றார்கள். குருடா! கண் தெரியவில்லை. சீமான்கள் மாத்திரமா வருகின்றார்கள்? இராணுவ வீரர்களும் வருகின்றார்களே. அது—தெரியவில்லை. ஆம், ஆம் அவர்களுந்தான் வருகிறார்கள்.

ஏதாவது புலியை, சிங்கத்தை வேங்கையை வேட்டையாடி, மக்களுக்கு வேடிக்கை காட்டக்கொண்டு வருகின்றார்களா? அல்லது ரணகளத்தில் கைது செய்த தளபதியைக் கட்டி இழுத்துக்கொண்டு வருகின்றார்களா? ஏன் இவ்வளவு அவசரம்? வா அருகில் போய்ப் பார்ப்போம்" என்று நாலா பக்கங்களிலிருந்தும் மக்கள் திரள் திரளாக வந்து கூடுகின்றனர். புலியோ சிங்கமோ வேங்கையோ என்று வேகமாக ஓடி வந்தவர்கள் வைக்கோல் உருவங்களைக் கண்டார்கள். வேதனைப்பட வேண்டியவர்கள் விலா வெடிக்கச் சிரித்தார்கள். யாருடைய உருவங்கள் இவை, சரியாகத் தெரியவில்லை.

வந்தவர்கள் நின்று வேடிக்கைப் பார்க்கின்றார்கள். வம்பர்கள் கீழ்வருமாறு பேசுகின்றார்கள்.

இழு! இழு! இழுத்துக்கொண்டு வா. விடாதே. இங்கெல்லாம் தீ வைக்கக் கூடாது. பராரிகளுக்குப் பாதுகாவல் தந்தவன் ஒருவன். பட்டாளத்தின் ரக்சியத்தைப் பகை நாட்டுக்கு அனுப்பியவன் ஒருவன். ஆக இருவரும் இதைக் கேட்டு மனம் உடைந்து சாகட்டும். இராணுவ வீரர்கள், அரசியல் அதிகாரிகள், இலக்கிய கர்த்தாக்கள் வசிக்கும் இடங்களிளெல்லாம் இழுத்து வா.

நாட்டின் கௌரவத்தை, செல்வர்களின் அந்தஸ்தை, சட்டத்தின் வன்மையை, நீதியின் நேர்மையை குலை நடுங்கவைத்த கொடியவர்கள். அவர்களை உயிரோடு பொசுக்க வேண்டியதற்கறிகுறியாக வைக்கோலால் செய்த இரண்டு கொடும்பாவிகளைக் கொளுத்துவோம்.

மங்காத கீர்த்திபெற்ற பிரான்சு நாட்டுக்கு ஓர் களங்கத்தை யுண்டாக்கிவிட்டனர். அதிமேதைகள் கூடி அளித்த தீர்ப்பை அவமதித்து, அரோரி பத்திரிக்கையில் ஆவேச எழுத்துக்களை எழுதுகின்றான். மின்னிய வாளேந்தி வீர நடை நடந்த இராணுவ வீரர்களை வம்புக்கிழுத்து, வீணுகச் சாகப் போகின்றான். பிரபல பிரெஞ்சு நாட்டின் இராணுவ அதிகாரிகள் எங்கே, இந்த பராரி பேறு தாங்கிக்குப் புகலிடம் தந்த அரோரி பத்திரிக்கை எங்கே? உயர்தர நீதிமன்றம் எங்கே? இந்த கீழ்த்தர அறை எங்கே? காகிதக் குப்பைகளைச் சேர்த்துக் கனல் மூட்டுகிறான். எவ்வளவு நேரம் எரியும். ஆதாரமில்லாமலா அவனைத் தண்டித்தனர். இவன், ஆவேசம் ஒன்றையே ஆதாரமாகக்கொண்டு அவர்களைக் கண்டிக்கின்றான். ஆவேசம் யாருக்கும் எளிதாக வரக்கூடியது. ஆனால் அறிவும் ஆராய்ச்சியும் அனைவர்க்கும் எளிதாக வரக்கூடியதல்லவே? எரிமலையைப் பார்த்து, சிறு நரி

னையிடுகிறது. சிந்திக்க நேரமில்லாமல் கூத்தாடுகிறன். இந்த ஒன்றிலேயேதான் ஒரு பெரிய அறிஞனக, இலக்கிய கர்த்தாவாக வந்துவிட முடியும் என்று கனவு காண்கின்ருன். நாற்றம் வீசுகிற நாகரிகமில்லாத சாதாரண ஏழைக் குடியானவர்களைப்பற்றி எழுதுகிருன். போன ஜென்மத்தில் செய்த பாவத்திற்குத் தண்டனையாக இந்த ஜென்மத்தில் நிலக்கரிச் சுரங்கத்தில் வதியும் சண்டாளர்களைப் பற்றி எழுதுகின்ருன். வழுக்கி விழுந்த வனிதைகள், போக்கிடமில்லாத பாபிகள், மனித எண்ணிக்கையிலே அகப்படாத அகதிகள், உழைக்க முடியாத சோம்பேறிகள், உழைத்தாலும் நாகரிகமாக வாழத் தெரியாத காட்டுமிராண்டிகள், விபசார விடுதிகள், இன்ன பிற பொல்லாங்குகளைத் திரட்டித் தருகின்ருன் தன் பேனவால். இவை எல்லாம் சிறந்த இலக்கியங்களாய்விட முடியுமா?

"பரமனைப்பற்றி, அவன் வாழும் பரமண்டலத்தைப் பற்றி, பக்தர்களைப்பற்றி, அவர்களுக்குச் செலுத்த வேண்டிய பாத காணிக்கையைப்பற்றி, சுக புருஷர்களைப் பற்றி, சுவிசேஷத்தைப்பற்றி, அவர்கள் செய்த அற்புதங்களைப்பற்றி, விண்ணைக்காட்டி, விண்மீன்களைச் சித்தரித்து, உலகத்தைக்காட்டி, அதில் வாழும் உன்னத வாழ்வினர் பெற்ற விருதுகளைப்பற்றி, அழகுமேனி, வண்டு நிறக்கூந்தல், அதில் குடியிருக்கும் முல்லை, அவளை கட்டிப் பிடித்திருக்கும் அழகு, இளமை, உடை நடை இப்படிப் பலவற்றை எழுதிஞலல்லவா சிறந்த காவியங்களாக முடியும்".

இவன் எழுதுகிருனே, தேம்பிய வாய், சிந்திய கண்ணீர், பிசைந்த கைகள், பின்னி பின்னி தள்ளாடி நடக்கும் கால்கள், சாக்கடையோரக் குடியிருப்பு, சாராயச்

கடையில் சண்டை, பீர்க்கடையில் புரளி, ரொட்டிக் கடையில் குத்து, வெட்டு, கடைத்தெருவில் காலித் தனம், விபசார விடுதியில் போலீஸ் தர்பார் என்றெல் லாம் எழுதுகிருனே இதுகளா சிறந்த இலக்கியங்களாக முடியும்?". நல்லா சொல்றீங்க.

சட்டத்துக்கு அடிபணியாத சண்டாளன் ஒருவன், சமர்க்களத்தின் ரகசியச் செய்தியை எதிரிக்குக் காட்டிய ஐந்தாம்படைத் தலைவன் ஒருவன். பாவம்! பிரான்சு நாடு எவ்வளவு அபரிமிதமான நம்பிக்கை கொண்டு இந்த கானல் நீரை உண்மை நீரென நம்பிற்று. நாட்டின் உயிர் நாடி போன்ற இராணுவத்தை ஒருவன் கையில் ஒப்படைப்பதென்ருல் சாதாரண வேலையா. நாட்டின் உயிரையே ஒப்படைப்பதைப்போன்ற வேலையாயிற்றே. எதிரிகளின் சாவுக்காகச் சமர்க்களம் நோக்கிச் சென்ற வன் சரணடையும் நிலையிலே சண்டாளத் தனத்தைச் செய்து தன் தாயகத்துக்கே சாவைத் தேடித்தர நினைத்து விட்டான். ரத்தஞ் சிந்தத் தயாரான வீரர்களை எதிரி களின் கையில் சிக்க வைத்து அடிமைகளாக்க எண்ணிய அற்பனின் கொடும்பாவியைக் கொளுத்துங்கள். அவ னுக்கு இது பிறந்த தாயகமாம். இருக்கலாம். ஆனல், அவன் பிறந்த இனம், யூத இனம். பிறந்த இனத்தின் புத்தியைக் காட்டி விட்டான். சுயநலமே உருவெடுத்து, சொந்த லாபம் என்ற குறிக்கோளிலேயே வளர்ந்து, தன் இனத்துக்கு மாத்திரம் நிழல் தரும் தன்னல மர மாயிற்றே யூத இனம்! மற்றவரை வாழ வைக்கும் மாண் பையே அறியாத இனமாயிற்றே! ஒன்றுக்குப் பத்தாய் வட்டி வாங்கி தன் புண் மனதைப் புன்சிரிப்பால் போர்த்து மற்றவரை அண்டிக் கெடுக்கும் அதிசய இனமாயிற்றே! யாரையும் வாழ விடாமல் தன் இனம் மட்டிலும் வாழ

நாட்டின் பணப்பெருக்கச் சாதனங்கள் எல்லாவற்றை யும் தனக்கே சொந்தமாக்கிக் கொள்ளும் ஈனப்பிறவி எடுத்ததாயாயிற்றே அந்த யூத இனம்! தனக்கென்று ஒரு நாடும் சொந்தமாயில்லாமல் கண்ட கண்ட இடங் களில் குடியேறி அங்கிருக்கும் வசதியை வாணிபத்தை அதிகாரத்தை அரசியலை மெதுவாகக் கைப்பற்றி மற்ற வரை நாயினுங் கேடாய் நடத்தும் பழக்கம் பெற்ற தாயிற்றே! ஜெர்மன் முழுதும் அவர்களுடைய ஆதிக்கந் தானே. அவ்வளவு சுயநலக் கூட்டத்தில் பிறந்த இவ னிடம் ஒப்படைத்திருக்கலாமா இவ்வளவு பெரிய இரா ணுவத்தை? வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கும் வெள்ளையுள்ளம் படைத்த நாடு எவ்வளவு பெரிய ஆபத் தில் சிக்கிக்கொள்ள இருந்தது. வீர மாதா ஜோன் ஆப் ஆர்க் அளித்த வெகுமதியாயிற்றே இந்த நாடு. வால் டேரும் ரூஸோவும் நடமாடிய தாயகமாயிற்றே இந்த புண்ணிய பூமி. வெஞ்சமரில் அஞ்சாத வீர நெப்போலிய னுடைய பீரங்கிகள் கர்ஜனை புரிந்த இடமாயிற்றே! இந்த நாட்டைக் காட்டிக் கொடுக்கச் சதி செய்து விட் டான் சண்டாளன். திறமை மிக்க இராணுவ காரியாலயத் தார் இந்த நயவஞ்சகனுடைய மோசடிகளைக் கண்டு பிடிக்காதிருந்தால் இந்நேரம் காடாயிருக்குமே? இல் லையானால் பலம் பொருந்திய பாரீஸ் கோட்டையில் ஜெர் மன் கொடி பறந்திருக்குமே, வீரர்கள் நடமாடிய வார் சேல்சில் வடிகட்டிய அயோக்கிய யூதர்கள் ஆரோகணித் திருப்பார்களே" எவ்வளவு ஆபத்து வரவிருந்தது. இராணுவத்தின் முகத்தில் கரி பூச எண்ணிவிட்டான்.

"ஜெர்மன் முழுதிலுமுள்ள எல்லா வாணிபங்களை யும் அரசாங்கக் காரியாலயங்களையும் யூதர்களைக் கொண்டு நிரப்பியதைப்போல பிரான்சிலும் நிரப்பிவிடத் திட்டமிட்டு விட்டான். இந்த யூதபூதம் டிரைபஸ்

(Dreyfus) இராணுவத் தளபதியாகிய இவன் தவிர வேறு யார் இவ்வளவு தைரியமாக இந்த அடாத செயலைச் செய்திருக்கமுடியும். இவ்வளவு கொடுமைகள் செய்த இவனை நடுத்தெருவில் நிறுத்திக்கொளுத்தியிருக்கவேண்டும். ஏதோ போகட்டும் என்ற காருண்ணிய உள்ளத்தோடு ஆயுள் தண்டனை அளித்திருக்கிறது நீதி மன்றம்.

எதிர்த்துப்பேச வக்கு, வகையில்லாமல் "நான் குற்றமற்றவன்" என்று மட்டிலும் சொல்லுகிறன் அந்த யூதக் குற்றவாளி டிரைபஸ். அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொள்ளாமல் என்ன செய்வான். தான் தப்பித்துக் கொள்ளத் தந்திரமான ஆதாரங்களைத் தேடி வைக்க மறந்துவிட்டான் போலும். இராணுவச் சேவை செய்தவன் அல்லவா, எதிலும் அவசரமுடிவு அதையே தான் இதிலும் செய்து அகப்பட்டுக் கொண்டான்."

"அவனுக்காக வாரிசு பேசுகிறன், இந்தக்கிறுக்கன் ஜோலா. இவன் வாயில் கொறடாவைவிட்டுப் பிளந்திருக்கவேண்டும். இழுங்கள். விடாதீர்கள். தலை நகரில் கொண்டுபோய்க் கொளுத்தவேண்டும்," என்று நிரபராதி டிரைபஸ், நீதிக்காக போராடிய ஜோலா ஆகிய இருவர் உருவங்களையும் வைக்கோலால் கொடும் பாவிகட்டி தெருத் தெருவாக இழுத்துக்கொண்டு போகின்றனர் ஏதுமறியாத மக்கள். எக்காளமிடுகின்றனர், தெரிந்தும் வேண்டுமென்றே செய்த வீணர்கள். உண்மை தெரியாமல் விழிக்கின்றனர் விவேகிகள். ஒன்றும் பேசாமல் இருக்கின்றனர் உண்மை விரும்பிகள். நெளிந்த மனதோடு திரும்புகின்றனர் நீதியில் நாட்டங் கொண்டோர்.

பிரான்சு நாட்டுக்கு மாத்திரமல்ல உலகுக்கே இது ஒரு பெரும் புதிராகத் தென்பட்டது. யார் உண்மையான குற்றவாளியென்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. நீதிக்கே அது முடியாமற் போய்விட்டது. இந்தச் சாதாரண மக்களா இதைக் கண்டுபிடிக்கப் போகின்றனர்?

ஆகவே தூற்றினர் டிரைபஸை. போற்றினர் அந்த மாபெரிய வீரனை வஞ்சனையால் குற்றவாளியாக்கிக் கூண்டில் நிறுத்திய ஹெஸ்டர் ஹெஸி (**Esterhazy**) என்ற பொல்லாதவனை.

## அற்ப சந்தோஷம்

ஒரு உயர்தர இராணுவத் தலைவனை, ஒப்புயர்வற்ற வீரனை, சலியாத உழைப்பாளியை, நல்லபடிப்பாளியை, வெற்றித்தாகம் கொண்டவனை, விருதுகள் பல பெற்றவனை, ஒரு குற்றமும் செய்யாதவனை, செய்ய நினைக்காதவனை, கடமையை மறவாதவனை, கண்ணியத்தைக் கைவிடாதவனை, செஞ்சோற்றுக் கடன்கழிக்க வெஞ்சமர் செய்தவனை, உயர்ந்த பண்புகளையும் உன்னத நோக்கங்களையும் கொண்டவனை, நாட்டின் உயிர் நாடியைத் தன்னுடைய ஜீவநாடி என்று நினைத்து, இரவு பகலாகப் பல பிணங்களைக் கடந்து சென்றவனை ரணகளச் சூரனை, பல நல்ல குணங்களுக்கு உறைவிடமானவனை, நாட்டின் மேல் அன்பும் விசுவாசமுள்ள டிரைபஸை, சீறிய சிங்கத்தைச் சிறு கூண்டில் அடைத்து விட்டு கைகொட்டிச் சிரிப்பதைப்போல், இந்த நேசத்தின் துணைவனை, நீதியின் மகனை, மாற்றுரைப் புறங்கண்ட மாவீரன் டிரைபஸை, ஒரு பயங்கர டெவில்ஸ் (**Devils**) தீவில்தள்ளிக் கைகொட்டிச் சிரிக்கிறது

இராணுவத் தலைமை நிலையம்—அதோடு சேர்ந்து கூத்தாடுகின்றனர் ஒன்று மறியாத மக்கள்.

"யூதன் ஒழிந்தான்" எக்காளமிடுகின்றனர் பிரபுக்கள். பொல்லாதவன் புலி வேடம் போட்டு ஆடும் போது, நல்லவன் ஒதுங்கிப் போவதைப் போல், அநீதி ஆரவாரம் செய்கிறபோது, நீதி தலை குனிந்து கொண்டு போய் விடுகிறது. நீதி குடியிருப்பது, நல்லவர்கள் மனதில், அந்த ஒரு சில நல்லவர்களும் காலக் கேட்டால் பொல்லாதவர்களாகின்ற போது, நீதி குடியிருக்க இடமில்லாமல் வெளியேறி விடுகிறது. அதை யார் தேடிப் பிடிப்பது. யாருடைய கண்களுக்குத் தெரியும். யாருடைய மனதில் குடியிருக்கும். அவன் ஒரு பராரியாயிருப்பான். அவன் தைரியமாக முன் வந்து, சொல்ல முடியுமா, இதோ என் அகத்தில் நீதி குடி புகுந்திருக்கின்றதென்று. அப்படியே அவன் துணிந்து, சொல்ல முன்வந்தாலும், அதை ஏற்க, ஏற்று ஆவன செய்ய யார் முன் வருவார்கள் ?

அந்தப் பராரி நிலையிலிருந்தவன்தான் டிரைபசுக்கு உயிர்ப்பிச்சை தந்து, சிதைய இருந்த நீதிக்கு அபயமளித்து, கெட இருந்த பிரான்சின் கௌரவத்தைக் காப்பாற்றி அகில உலக இலக்கிய மன்றத்தின் அழியாத சின்னமாக விளங்குகிற, பேனாவால் 'நானா' எழுதிய எமிலி ஜோலா என்ற பேரறிஞன். எழுத்துக்கனலால் ஈனர்களின் இறுமாப்பைப் பொசுக்கிய எரிமலை. - எங்கேயோ அடையாளந் தெரியாதபடி வெட்டித் தள்ளப்பட்டிருந்த நீதியை மன்றத்துக்கழைத்த மாவீரன். ஒரு நிரபராதிக்கு வாழ்வளித்தான் என்று வையகம் அவனைக் கொண்டாடவில்லை. நீதிக்கு நிகரற்ற வாழ்வளித்தான் என்று உலகம் உவகை பூக்கிறது. பிரான்சு நாட்டின்

கண்ணியத்தைக் காப்பாற்றினான் என்பதால் அவனைக் கண்ணியப்படுத்தவில்லை. கண்ணியம் என்ற அந்த மேலான வார்த்தையின் உண்மையான தத்துவத்தையே காப்பாற்றித் தந்தான் என்று வையகம் அவன் கல்லறை மேல் கண்ணீர் சொரிகிறது.

நாட்டை எதிர்த்தனர், பீரங்கிக் குண்டுகளை எதிர்த்தனர் இராணுவத்தார். வீரர்களை எதிர்த்தனர் இராணுவத்தார். விண்ணையும் மண்ணையும் புகை மண்டலங்களாக்கினர் இராணுவத்தார். பிணங்களைத் தாண்டினர் இராணுவத்தார். பனியை, குளிரை, பசியை, மழையை, நீரை, நெருப்பை எல்லாம் எதிர்த்துப் போராடினர் இராணுவத்தார். அந்த வண்மை மிக்க இராணுவத்தை எதிர்த்தான் எமிலி ஜோலா. "என்ன துணிகரம் இவனுக்கு? எவ்வளவு தைரியம். சமர்க்களத்தில் சண்டையிடுபவர்களை சண்டைக்கிழுக்கின்றான்," என்று சரம கவி பாடுகின்றனர் மக்கள். என்றும் நீதிக்காகப் போராடினான். தயை, தாட்சண்யம் பாராமல் போராடினான். தன் எளிய நிலை, எதிரிகளின் வன்மை ஆகிய காரகாரம் தெரிந்தே போராடினான்.

முக்காடிட்டுச் சந்துகளில் விழுந்தோடும் அநீதியே! பலமான இராணுவ முகாம் இருக்கிறது நம்மைக் காப்பாற்ற என்ற கர்வம் கொள்ளாதே. நீதியின் காவலன் அழைக்கிறேன். தைரியமிருந்தால் வெளியே வா, என்று பகிரங்க சவால்விட்டான். அந்த அநீதியை அரியாசனத்தில் அமர்த்தி ஆலவட்டம் வீசும் மானங்கெட்ட இராணுவ முகாமே! உனக்குத் தைரியமிருந்தால் வெளியே வா. பிரான்சு நாட்டின் நீதிமான் அழைக்கிறேன். நாட்டின் மேல் ஆணையாக உனக்கு நேர்மையில் நாட்டமும், நீதியின் மேல் அன்பும் இருந்தால்

தயங்காமல் வெளியே வா. உன் முக மூடியைக் கிழித்து உன் உண்மை உருவத்தை உலகுக்குக் காட்டுகின்றேன். வா வெளியே!" என்று சங்கநாதம் செய்தான் தைரியத்தின் தந்தை ஜோலா.

## இவன் யார்?

இந்தப் புரட்சிக்காரன் யார்? பாட்டி கிரேக்க நாட்டாள். தாய் பிரான்சு தேசத்தாள். தந்தை இதாலிய நாட்டான். கிரேக்கத்தின் தத்துவம், பிரான்சின் அழகு, கலை, இதாலியின் ரோம் நாகரிகம் ஆகியவைகள் ஒன்று சேர்ந்த உருவந்தான் ஜோலா. ஜோலா என்றால் நிலத்தின் ஆடை என்று பொருள். இளமையில் திக்குவாயன். சரியாகப் பேசக்கூடத் தெரியாதவன். யாராவது 'உன்னுடைய பெயர் என்ன?' என்று கேட்டால், ஜோலா என்பதற்குப் பதில், தோலா என்பான். இந்தப் பிள்ளையைத்தான் தாயோடுவிட்டுவிட்டு இறந்துவிட்டான், சிவில் இன்ஜினீராக வேலை பார்த்து வந்த இவன் தந்தை பிரான்சிஸ்கோ ஜோலா. (**Francisco Zola**).

தந்தையின் முடிவுக்குப்பின் தாயாரால் சிறிது நாட்கள் வளர்க்கப்பட்டு எய்க்ஸ் (**Aix**) என்ற கல்லூரியில் படிப்பதற்காகச் சேர்க்கப்பட்டான். அங்கே இவன் படித்த பாடங்களைவிட, படித்த நாட்களைவிட மாணவர்களிடம் சண்டை போட்ட நாட்கள்தாம் அதிகமாயிருக்கும். ஒரு பெரிய கூட்டத்தையே எதிர்த்துப் போராடுவான். இப்படி ஏற்பட்ட பல தடவைகளிலே ஒரு தடவை மாணவர்களால் நையப்புடைக்கப்பட்டு மூர்ச்சையாய்க் கீழே விழுந்துவிட்டான். இவன் இறந்து விட்டிருப்பான் என்று பயந்து மாணவர்கள் எல்லாம்

தலைமறைவாக ஓடிவிட்டார்கள். ஆனால் ஒருவன் மாத்திரம் இவன்ருகில் வந்து இவனைத் தேற்றினன். அப்போதும் மனம் கலங்காமல், "ஓ பரவாயில்லை, என்னை நானே காப்பாற்றிக் கொள்ளுகிறேன்." என்று எழுந்து நடக்க ஆரம்பித்தான்.

இவனுக்கு இந்த ஆபத்தில் கைகொடுத்த நண்பன் தான், இவனேடு கடைசீ வரையிலும் இருந்தவனும், இவனுடைய்ய வாழ்விலும் தாழ்விலும் பங்கு கொண்ட வனும், சிறந்த ஓவியப் புலவனுமான பால் செஸானே (Paul cezanne) என்பவன். நீண்ட நாட்கள் வரையிலும் இவர்களிருவரும் கொடுங்கோல் உலகத்தின் கண்களுக்குக் கொடுங்கோலர்களாகக் காணப்பட்டார்கள்.

எய்க்ஸ் (Aix) கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கும் போது தன் பதின்மூன்ருவது வயதிலேயே சிறந்த நாடகம் எழுதக் கற்றுக்கொண்டான். ஆனால், இந்த ஏழை எழுதிய நாடகத்தை யார் மதிக்கிருர்கள்.

அங்கிருந்து எகோல் நார்மேல் (Ecole normale) என்ற கல்லூரியில் படிக்கப் பாரீசுக்குப்போனன். படிக்கப் போனன் என்ருல் தனக்கிஷ்டமானவைகளை கலாசாலையில் சொல்லிக் கொடுப்பதையல்ல. இந்த முறை உலக விவகாரத்துக்குச் சிறந்ததாயிருக்கலாம். ஆனல் கல்லூரியின் கட்டுப்பாட்டுக்கும் சட்டத்திட்டங்களுக்கும் உகந்ததல்லவே. ஆகவே கல்லூரிப் பாடங்களைக் கவனிக்காமல் தன்னிஷ்டமான கல்லூரிக்குப் புரம்பான பாடங்களைப் படித்ததால் எல்லாவற்றிலும் ஏழைமார்க்கு, அதிலும் குறிப்பாக இலக்கியத்தில் பூஜ்யம் வாங்கினன்.

## தாய் உள்ளம்

தந்தையற்ற மகனைச் சான்றோனாக்க வேண்டும். தன் கணவனைப்போலவே இன்ஜினீர் வேலைக்குப் படிக்க வைக்க வேண்டும். அவர் விட்டுச் சென்ற பெரிய வாய்க்கால் வேலையை இவனைக்கொண்டு முடித்து வைக்கும் உரிமையை சர்க்காரிடம் வாங்க வேண்டும். தன் மகனுடைய முன்னேற்றத்தைக் கண்டு உளம் பூரிக்க வேண்டும். தன் வறுமை ஓரளவுக்கு மடிந்து, மடிந்த தன் கணவனால் ஏற்பட்ட கவலை மறைய வேண்டும். என்றெல்லாம் நினைத்து, எவ்வளவோ வேலைகளைச் செய்து படிக்க வைத்தாள். பரீட்சையில் பூஜ்யம் வாங்கினான் என்று தெரிந்தவுடன், தன் கண்ணெதிரில் உலகமே பூஜ்யமாக கற கறவென சுற்றுவதைப்போல வேதனைப் பட்டாள். காலம் நம்மை இன்னும் சதி செய்கிறது. கணவனும் உயிர் நீத்துவிட்டார். தனயன் தான் தோன்றியாய் விட்டான். இனிப் புகலிடமில்லை. எங்கு போய் தங்குவோம்? எப்படி வாழ்வோம்? எவ்வாறு மகனைத் திருத்துவோம் என்ற கவலையிலாழ்ந்து, கண்ணீர் விடுகிறாள். எவ்வளவோ பிள்ளைகள் படித்து பட்டம் பெற்று நீதிபதிகளாய், சட்ட நிபுணர்களாய், செல்வாக்கோடு திரிகின்றார்களே. என் மகன், ஒரே மகன் ஒன்றுக்குமே அருகதையற்றவனா! காலமே! நின்னையே வேண்டுகிறேன். காலமே! நீயே அவனை நல்லவனாக்கு. இனி என்னால் ஒன்றும் செய்ய இயலாது. என் எண்ணமெல்லாம், நான் அவன் வகையில் தீட்டியிருந்த திட்டமெல்லாம், கற்பாறையை நோக்கியடித்த கண்ணாடி கோப்பையாயிற்று" என்று ஏங்கினாள். என்ன செய்வாள் பாவம்! மகனோ முரடன். அவன் வழியேவிடாவிட்டால், இன்னும் என்னென்ன விபரீதங்கள் நடக

குமோ, எங்கு ஓடிப்போவானே. எப்படியோ நடப்பது நடக்கட்டும் என்று விட்டு விட்டாள். எனினும் விநாடிக்கு விநாடி மகனுடைய வருங்காலத்தை எண்ணி வருந்தாமல் இருக்க முடியவில்லை அந்தத் தாய் உள்ளத்தால்.

இப்படியே இவனுடைய வாழ்க்கைச் சகடத்தில் இருபது ஆண்டுகள் உருண்டோடின. தன் இருபதாவது, வயதில் இப்படி ஒரு கடிதத்தைத் ஆருயிர் நண்பன் ஒருவனுக்கு எழுதுகின்முன்.

ஆருயிர் நண்பா !

இந்த எனது இருபதாவது வயது வரையிலும் எனக்கு ஒரு வேலையும் கிடைக்கவில்லை. எந்த வேலைக்கு நான் தயாரானவன் என்று என்னுலும் புரிந்து கொள்ள முடியவில்லை. சமூக வழுக்கு நிலத்தில் தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருக்கின்றேன். நான் எப்போது கீழே விழுந்து விடுவேன் என்று எனக்கே தெரியாது. இந்தச் சிறு வயதிலேயே பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. அதற்காக நான் வருந்தவில்லை. வருங்காலம் நிச்சயமாக நம்முடையதாகும் என்ற நம்பிக்கைத் தளரவில்லை எனக்கு.

அன்புமறவாத

**ஜோலா.**

**வேலை காலியில்லை**

இந்த வாசகத்தைத் தாங்கித் தொங்கிக் கொண்டிருக்கும் பலகைகளின் பக்கங்களிலெல்லாம் ஜோலாவைக்

காணலாம். வேலைக்கு ஆள் தேவைப்படுகின்றவர்கள் கூட இந்த மாதிரியான பலகைகளைத் தொங்கவிட மாட்டார்கள். ஏனென்றால், ஒரு ஆள் தேவைக்காக இந்தப் பலகையைத் தொங்க விட்டால் நாள் ஒன்றுக்கு ஒன்பாதாயிரம் ஆட்கள் உள்ளே நுழைந்து உயிரை வாங்குவார்கள்.

ஆளுக்கு வேலை தேடுவதுதான் கடினமே தவிர, வேலைக்கு ஆள் தேடுவதா கடினம்? அப்படியே இரண்டொருவர் வேண்டுமென்றால், ஏற்கெனவே வேலைசெய்து கொண்டிருப்பவர்களுடைய சொந்தக்காரர்கள் யாராவது இருக்கமாட்டார்களா, அவர்களை இழுத்து விட்டு விட்டால் போகிறது. இதற்காக அந்தப் பலகையை மாட்டுவானேன்? வெறும் சிபார்சுக் கடிதங்களாக வந்து குவிவானேன். நல்லவர்கள் நிஷ்டூரத்தைத் தேடிக் கொள்வானேன் என்று இருந்துவிடுகின்றார்கள். இந்த நிலையில் ஜோலாவுக்கு வேலை கிடைப்பதெங்கே? அவன் வறுமையை ஓட்டி நிம்மதியான வாழ்வை மேற்கொள்வதெங்கே? நாளெல்லாம் சுற்றுகிறான். எங்கே போகிறோம் என்ற குறிக்கோளில்லாமல் சுற்றுகிறான். எங்கும் வேலை கிடைத்தபாடில்லை.

## தந்தையின் நண்பன்

செய்வதின்னதென்றறியாது படுபாதாளத்தில் விழ இருந்த இவனை, இவனுடைய தந்தையின் நண்பன் லாபாட் என்பவன் நெப்போலியன் டாக்கில் ஒரு குமாஸ்தா வேலையை வாங்கித் தந்தான். அதனால் கிடைத்த வருவாய் இவன் வயிற்றை நிரப்பி உடலை மூடிக்கொள்ள மட்டிலுமே போதியதாயிருந்தது.

அங்கே வேலை செய்வது அவ்வளவு எளிதாயில்லை. இவனுடைய கால்களை முறித்து, முதுகை வளைத்து, உதடுகளை உலர்த்திவிட்டது. அவன் செய்த வேலைகள் அவனை எங்கேயோ பாதாள அறையில் அழுத்துவதைப் போலவே நினைத்தான். பல கஷ்டங்களை பட்டுப்பட்டு மறத்துப்போன உள்ளமும், சலித்துப்போன உடலும் உடைய இவனுக்கே இந்த வேலை இவ்வளவு கடினமானதாக இருந்ததென்றால் வேலையின் தரத்தைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? உடனே வேலையைவிட்டு நீங்குவது தவிர வேறு வழி தெரியவில்லை. வேலையை விட்டால் என்ன நேரும் என்று இவனுக்கு நன்றாகத் தெரியும். எனினும் விட்டொழித்துவிடுவது என்ற முடிவுக்கு வந்துவிட்டான். வேலையில்லாமல் திண்டாடு கின்றவர்கள் எவ்வளவோ பேர்கள் தற்கொலை செய்து கொள்ளுகின்றார்கள். அது ஒரே நாளில் ஒரு சில விநாடிகளில் தீர்ந்துபோகும் வேலை. இது காலமெல்லாம் போராட வேண்டியதாயிருக்கிறது. இதை விடப் பட்டினியாகச் சாகலாம். ஏனெனில் பட்டினி நமக்குப் பல நாட்கள் பழக்கம். என்று சொல்லி அந்த வேலையை விட்டு விட்டு வெளியே வந்துவிட்டான்.

## மீண்டும் பராரி

பசி, பட்டினி, ஏமாற்றம், அலுப்பு, களைப்பு, அலைச்சல், அவமதிப்பு, வீண் கனவுகள், கவைக்குதவாத எண்ணங்கள், மனிதனுடைய புத்துணர்வின் அமைப்புகள், புதிய சொப்பனத்தின் திட்டங்கள், மிக மிக இடைவெளிவிட்டுப் போயிருக்கும் வான மண்டலத்தை நிலத்துக்கருகாமையில் இழுத்துக் கொடுக்கும் முயற்சிகள், புதிய சுவிசேஷம் எழுத வேண்டிய அவசியம் ஆகியவைகளை எழுதுவதின் மூலந்தான் ஒரு புதிய சமூகத்தைக்

க... ...உயுமென்ற சிந்தனைகள் ஆகியவைகளுக் கி... இரண்டாண்டுகள் நாடோடியாய்த் திரிந்து கொ...ருந்தான். எந்த எண்ணத்தின் முடிவு இவனு...ு வந்தாலும் வராவிட்டாலும் பசி மாத்திரம் அடி... வந்துபோய்க்கொண்டிருந்தது.

...ும் அருமை நண்பன் செஸானேவோடு பாரீஸ் நகர் ...க்கி நடந்தான். அங்கே ஒரு சிறிய அறையை அமர்...கொண்டு எதிர்க் காலத்தைப்பற்றிப் பெரிய மனக்...ட்டைகள் கட்டிக்கொண்டிருந்தனர். இதற் கிடை... பட்டினி விரதங்களுக்குக் கணக்கே இல்லை. ஜோலா...ன் பேனுவில் புதிய கருத்துக்கள் உதிர வேண் டும். செஸானே மைக்கோலில் புதிய ஓவியம் கிளம்ப வேண்டும். ஆகவே ஜோலா பல பாடல்களைத் தீட்டி ஞன். செஸானே ஓவியங்களைத் தீட்டிஞன். ஆனல் இருவரும் இந்த அருமையான கலையைக் கற்றிருந்தார் களே தவிர இவைகளை வாங்குவதற்குண்டான பொது மக்களை உண்டாக்கவில்லை. உண்மையாகச் சொல்ல வேண்டுமாஞல், இந்த இருவர்களைப்பற்றிப் பொதுமக்க ளுக்கு ஒன்றும் தெரியாது.

ஓவியம் நன்ருயிருந்தால் போதும், அதைத் தீட்டிய வனைப்பற்றிக்கூட அவ்வளவு கவலைப்படமாட்டார்கள். ஆனல் காவியம் அப்படியில்லையே, காவியத்தின் தரா தரத்தைப் பார்ப்பதைவிட, அதைப் புனைந்தவன் பெயர் பெற்றவஞ, கலையரங்கம் ஏறியவஞ, கருத்துச் சோலையில் திரிந்தவஞ, மக்களால் மதிக்கப்பட்டவஞ, அறிஞர் களின் கருத்தை நாடியவஞ, அரசனல் அன்பளிப்புப் பெற்றவஞ. என்றெல்லாம் முதலில் சிந்தித்துப் பார்த் துப் பிறகுதானே கவியைப் படிக்கத் தொடங்குவார்கள். அந்த நிலையில் விளம்பரமாகாத ஜோலாவின் கவிகளை

யார் படிப்பார்கள்? இவர்கள் வறுமையால் வடித்துத் தந்த காவியத்தையும் ஓவியத்தையும் பொதுமக்கள் என்ற ஜோதியில் கலக்கவிடவில்லை.

இந்த நிலையில் ஜோலா ஒரு நாள் மனமுடைந்து சொல்கின்றான். "என்றாவது ஓர் நாள் நான் ஓர் சிறந்த இலக்கியத்தை எழுதப் போகின்றேன்," என்று, எதிர் காலத்தில் தளராத நம்பிக்கையோடு இப்படிச் சொல்லு கிற இவனைப் பார்த்து. "உம், உம், அதுதான் பார்க் கின்றோமே, தினம் பட்டினி, மனக் கோட்டைகள், உட்கார்ந்துகொண்டிருக்கும் உனது காவியங்கள், உறங் கிக்கொண்டிருக்கும் எனது ஓவியங்கள், அவைகளைப் பார்த்துத் திட்டிக்கொண்டிருக்கும் நம்முடைய பசித்த வயிறுகள் எல்லாவற்றையுந்தான் பார்த்துக்கொண்டிருக் கின்றோமே, நாம் மாத்திரமா பார்த்துக்கொண்டிருக் கின்றோம். நம்மிடம் வாடகை கேட்டுக்கேட்டுச் சலித் துப்போன வீட்டுக்காரன். நானைப் பணங்கொடுக்கா விட்டால் பட்டினியாகப் போட்டு சாகடிப்பேன் என்று பயமுறுத்தும் ரொட்டிக் கடைக்காரன். "பாவிகளா! கடன்காரத் துரோகிகளா!" என்று திட்டும் பால்காரன், "இப்படியும் உடலை வளர்க்கின்றார்களே," என்று கேலி செய்யும் நகர மக்கள் எல்லாருந்தான் பார்த்துக்கொண் டிருக்கின்றார்களே. சும்மா படு. அதோ மூலையில் இருக்கிறதே கூஜா. அதில் நிறையத் தண்ணீர் கொண்டு வந்து வைத்திருக்கின்றேன். வயிறு நிறையக் குடித்து விட்டுப் படு. தூக்கம் எங்கே வரப்போகிறது? தூங்கா மல் வேறு என்னதான் செய்வது? எல்லாருந்தான் தூங்குகின்றார்களே. இப்போது நாம் மாத்திரம் என்ன செய்வது? அவர்கள் விழித்துக்கொண்டிருக்கும்போதே நம்முடைய வியாபாரம் நடப்பதில்லை. தூங்கும்போதா நடக்கப்போகின்றது. பேசாமல் படு. இதுவரையில்

எழுதிய காவியமும் ஓவியமும் செல்வாகட்டும். பின்னல் எழுதலாம். என்னமோ பாழாய்ப்போன பாரீஸ் பட்டணத்தில் வர வர கலை ரசிப்பே ஒழிஞ்சிப்போச்சு'' இப்படி முணு முணுக்கிறன் செஸானே.

சில நேரம் களைப்பால் தூங்கி விடுவான் செஸானே. பசி பொறுக்கமாட்டாமல் பகல் வேளையில் இப்படி அப்படி உலவிக்கொண்டிருப்பான் ஜோலா. சிட்டுக்குருவி கூட்டம் கூட்டமாக வந்து கூரைமேல் உட்காரும். குருவிகளை அறையின் உள்ளிருந்தபடியே பிடித்துக் கொள்ளலாம், அவ்வளவு பெரிய கை நுழைகின்ற அளவுக்குச் சந்துகள் இருக்கும் கூரையிலே—மழைக்காலங்களில் இவர்கள் அறையிலிருந்தாலும் வெளியிலே இருந்தாலும் ஒன்றுதான். சில நேரங்களில் அடைமழை பிடித்து அறையெல்லாம் வெள்ளக்காடாயிருக்கும். மழையைத் தடுக்கச் சந்துகளை அடைக்க தன் பழைய கோட்டுக் கந்தல்களால் அந்த சந்துகளை அடைப்பான் ஜோலா.

சமாளிக்கமுடியாத பசி எடுக்கும்போது கூரையில் வந்து கூட்டமாக உட்காரும் குருவிகளைப் பிடித்து கம்பியில் குத்தி விளக்கில் வாட்டி பக்குவப்படுத்தித் தூங்கும் தன் ஓவியப் புலவனை எழுப்பி உடனிருந்து உண்பான். பிற்காலத்தில் பிரான்சுநாடே தலை வணங்கத்தக்கத் தலைவனுடைய கெதி சிட்டுக்குருவி உணவு. இவர்கள் பசிக்காகக் குருவிகளைச் சாப்பிடுகிருர்கள். எவ்வளவோ சீமான்கள் சுகமனுபவிக்கச் சித்தாந்த சிட்டுக்குருவி லேகியம் சாப்பிடுகிருர்கள். என்ன உலகம் இது என்று இன்னமும் பல ஏழைகள் ஏங்கத்தான் செய்கிருர்கள்.

குருவியைக் கொல்வது பாவந்தான் என்று இவர் களுக்கும் தெரியும். ஆனால் கும்பி கேட்கவில்லையே: சன்மார்க்கம் தெரிந்த எவ்வளவோ பேர்கள் துன்மார்க் கர்களாக மாறுவதற்கு என்ன காரணம் என்று உலகத் தையே அதட்டிக் கேட்ட எமிலிஜோலாவுக்கு இதோப தேசம் தெரியாமலா இருக்கும். எந்த சூழ்நிலை நல்ல வனைத் திருடனாக்குகிறதோ, எந்த சூழ்நிலை நல்ல மாதரை விலைமாதர்களாக்கியதோ. எந்த சூழ்நிலை யோக் கியர்களை அயோக்கியர்களாக்கியதோ அதே சூழ்நிலை தான் நமது வருங்கால இலக்கியத் தந்தையை குருவி களைக் கொன்று தின்னச் செய்தது. ஏழ்மையை எடுத் துக்காட்ட இந்த நிகழ்ச்சி ஒரு எடுத்துக்காட்டாக அமைகிறது பிற்காலத்தில்.

## இரண்டாவது தொழில்

இப்படிப் பல நாட்கள் வாடி வதங்கியபின் மீண்டும் தன் தந்தையின் நண்பர் ஒருவரால் ஒரு நூல் வெளி யீட்டுக் கம்பெனியில் புத்தகங்களைக் கட்டுக் கட்டும் வேலை கிடைக்கிறது. அந்தத் தொழிலில்தான் இவன் உலகத்தின் பல பாகங்களைக் காணமுடிந்தது. ஏனெனில் தான் கட்டுக் கட்டும் நூல்கள் பலவற்றைப் படிப்பான். படித்ததோடு நில்லாமல் சிந்தித்து அந்த நூல்களைப் பற்றிய கருத்துரைகளை எழுதி அனுப்புவான்.

## எழுத்தாளன்

தான் ஒரு தலை சிறந்த எழுத்தாளன் ஆக வேண்டு மென்பதிலே அவனுக்கிருந்த ஆர்வம் சொல்ல முடியா தது. ஏனெனில் உண்மையும் வண்மையும் உயிர்த் துடிப்பும் உள்ள எழுத்துகள் உலகத்தை என்னென்ன

கொ...ருக்கின்றன என்பதை அவன் நன்றாக உணர்ந்தவன். மாபெரிய கவிதாமேதைகளான ஹோமர், மில்டன், கெதே, ஷேக்ஸ்பியர் போன்றவர்களின் எழுத்துக்களும், இரேக்க நாட்டின் துன்பம் நிறைந்த துக்க எழுத்துக்களும் பதினெட்டாவது நூற்றாண்டில் காவியமாக, கலையரங்கமாக இலக்கியச் சிகரமாக எண்ணத்தின் ...தியாக அமைந்துவிடுகின்றன. அந்த அரிய காவியங்களை மக்கள் ரசிக்க, கலையின் தன்மையெனக் கொண்டாட, இயற்கையின் எழில் மிகுந்த தோற்றங்கள் எழும் வானத்தின் மின்மினிகள். கவி வாணரின், கற்பனை மண்டபத்தில் மின்னும் ஒளி என்ற அளவில் நின்றுவிடுகின்றன. சமூகத்தின் கழுத்தில் இட்ட சொல்லாரமாக அமைந்துவிடுகின்றனவேயன்றி செல்லரிக்கும் சமூதாயத்தைச் சீர்படுத்தும் எச்சரிகையாக அமையவில்லை என்பது அவன் கருத்து. ஆனால் அவர்களுக்குப் பின்னால் தோன்றிய சார்லெஸ் டிக்கன்ஸ் எழுதிய டேவிட் காப்பர்பீல்டு. ஆலிவர் டிவிஸ்ட். பிக்விக் பேபர் போன்ற நூல்களின் மூலம் வெடித்து வெளியே கிளம்பிய எழுத்துக்கள். அம்பு நேராக மார்பைத் துளைப்பதைப்போல் பாய்ந்து, மக்களையும் நாட்டையும் பிரபுக்களையும் சீமான்களையும் திடுக்கிடச் செய்தது என்பதை மறுப்பதற்கில்லை.

அதன் பிறகு தோன்றிய புரட்சி எழுத்தாளர்களான ருசோ, வால்டேர், மிர்ரபே போன்றவர்களின் எழுத்துத் தீ நாட்டையே புரட்சித் தீயில் தள்ளிச் சர்வாதிகாரத்தைச் சாம்பலாக்கிற்று. புரட்சி அதிக வேகமாக நடந்து கொண்டிருக்கும்போது, அதன் பின்னால் எந்தச் சக்தி ஒளிந்து கொண்டிருக்கின்றதென்பதை அறியமுடியாத அளவுக்கு நிலமையைத் துரிதமாக்கிய காரணத்தால் முடியாட்சி மாண்டு, குடியாட்சித் தோன்றி, மீண்டுமோர்

நெப்போலியனுடைய ஆட்சி ஏற்படவேண்டிய நிலைக்கு வந்துவிட்டது. அந்தப் புரட்சியின் வேகம் பைத்தியக்காரனுக்கு மயக்க மருந்தை கொடுத்ததைப் போல், புரட்சியை எதிர்த்தவர்களும் கொல்லப்பட்டார்கள், புரட்சி செய்தவர்களும் கொல்லப்பட்டார்கள். எந்த மக்களுக்காகப் புரட்சித் தலைவர்கள் தோன்றவேண்டியது அவசியமாயிற்றோ. அதே மக்களால் அதே புரட்சித் தலைவர்கள் கொல்லப்பட வேண்டியவர்களானார்கள். அந்த அளவுக்குப் பிணப் பசியும் ரத்தத் தாகமும் தோன்றிவிட்டது அவர்கள் எழுத்துக்களால். மேலும் அவர்களுடைய எழுத்துக்கள் வெறும் அரசியலை மாத்திரம் குறி பார்த்துச் சமூகத்தை மேல் வாரியாகத் தொட்டும் தொடாமலும் விட்டுவிட்டது. அவர்கள் சமூகத்தைச் சுட்டிக் காட்டிய இடங்களிலெல்லாம், சமூகப் பலகைக்கு அரசியல் சட்டம் போட்டதைப் போல் முடிந்துவிட்டது.

ஆனால் ஜோலாவின் எழுத்துக்கள் ஒரேயடியாக சமூகத்தையும் அரசியலையும் தட்டி எழுப்ப, சதி செய்த சண்டாளர்களைச் சந்திக்கிறது. ஏனென்றால் அன்றைய பிரான்சு நாட்டின் நிலை சமூகத்தையும் அரசியலையும் வெவ்வேறாகப் பிரிக்க முடியாமல் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருந்தன.

இரண்டும் ஒன்றறக் கலந்ததின் விளைவாகச் சமூக இழிவுகளைப் பயன்படுத்திக்கொண்டு ஒரு சாரார் தங்களை அரசியல் தலைவர்கள் என்று சொல்லிக்கொள்ளவும் இந்த ரகசியத்தையும் சூதையும் அறியாத பெரும்பாலான பாமரமக்களை அடிமைகளைப்போல் கொடுமைப் படுத்தவுமான நிலையையுண்டாக்கிவிட்டது. இதோடு நின்றுவிடவில்லை. இந்தக் கொடுமை பிரான்சு நாட்டை

எந்த அளவுக்குக் கொண்டுபோய்விட்டு விட்டதென்ருல் பழிசுமத்தல், வஞ்சந்தீர்த்தல், காரணமில்லாமல் ஒரு வனைச் சிறையிலடைத்தல், நிரபராதிகளைக் கொன்று குவித்தல், ஆகிய அராஜரீகமான பயங்கரச் செயல்கள் அன்றுட நிகழ்ச்சிகளாய் விட்டன. அது மட்டிலுமல்ல, இந்தக் கொடுமைகளுக்கு அவர்கள் காட்டிய மரியாதை ராணிக்குக் காட்டும் மரியாதையைவிடப் பன்மடங்கதிக மாக இருந்தது. சீலத்தை மதிக்கிருயா? செங் கோலுக்குப் பணிகிருயா? சித்ரவதை செய்ய விரும்பு கிருயா! எது உனக்குப் பிடித்தம் என்று அன்றிருந்த பிரான்சு நாட்டான் எவனையாவது கேட்டால், சீலம் என்ற சொல்லை எங்கேயோ கேட்டதாக நினைவு, செங் கோல் என்ன பிரமாதம், சித்ரவதை ஒன்றுதான் என் வீரத்தைக் காட்டும் என்று சிரிப்பான். ஒழுக்கம் கழு மரத்தில் தொங்கிக்கொண்டிருந்த காலம். சீலமுள்ள வன் சோம்பேறியாகவும் சிறுமதியும் குறைமதியும் படைத்தவன் சீலமுள்ளவனுகவும் கருதப்பட்டான். இப்படியே பல ஆண்டுகள் ஒரு நாடு போய்க்கொண்டி ருந்தால் அதன் கதி என்ன ஆகும். சமுதாயமும் நாக ரிகமும், ஒழுக்கமும், பண்பும், உயர்ந்த நோக்கங்களும் வெப்பத்தில் வைத்தப் பனிக்கட்டி போல் உருகி, நாடு வெறும் காடாய், அதுவும் நாளடைவில் கல்லும் முள் ளும் நிறைந்த கட்டாந்தரையாய்விட்டிருக்கும். அந்தப் பயங்கர நிலையிலிருந்து பிரான்சு நாட்டைத் தன் எழுத்துவன்மையால் காப்பாற்றி அந்தப் பொலிவிழந்த பிரான்சு நாட்டுக்குப் புத்துயிர் அளித்தவன்தான் உல கத்தின் தலைசிறந்த மனிதாபிமானியும் நேர்மையின் நண்பனுமான ஜோலா.

சுற்றி வளைத்துச் சூசகமாகச் சொல்லித் தவறுகளை இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சுட்டிக்காட்டி எழுத்

துக்களை எல்லாம் ஈரமாக்கிப் புரிந்தும் புரியாமலும் அடுக்கி, தெரிந்தால் தெரிந்துகொள்ளட்டும் இல்லா விட்டால் போகட்டும் என்று பராமுகமாக இருந்து விடுபவனல்ல. எந்தச் சக்தியை எதிர்த்துப் போராடு கிறோம் நாம், அதன் விளைவு என்ன ஆகும் என்பதை யெல்லாம் சிந்தித்து அதனால் வரும் அபாயத்தை எண்ணி பயந்து, பயத்தின் நடுக்கத்தால் பேனாவைத் தள்ளாடவிட்டுத் தானும் தளர்ந்துவிடுபவனல்ல ஜோலா.

பீரங்கிக் குண்டுகளும், துப்பாக்கி வேட்டுகளும் வைத்த குறி தவறினாலும் தவறிவிடும். ஆனால் ஜோலா வின் எழுத்துக்களுக்குக் குறி தவறியதே இல்லை. குண்டு கள் குறிவைத்ததை மாத்திரம் அழித்துவிடும், பீரங்கி கள் வெடித்த கட்டிடம் மாத்திரம் நாசமாகும், வாள் பாய்ந்த மனிதன் உயிரோடு சரி, தீர்ந்தது வேலை. ஆனால் ஜோலாவின் எழுத்துக் கனல், நாகரிகமிக்க பாரீஸ் பட் டணத்தை மாத்திரமல்ல, அந்த அழகு நகரின் தாயக மான பிரான்சு நாட்டை மாத்திரமல்ல, அதைத் தாங்கி நின்ற ஐரோப்பா கண்டத்தை மாத்திரமுமல்ல, குற்றமற்ற டிரைபஸ் என்ற இராணுவ வீரன் அடைபட்டிருந்த டெவில்ஸ் தீவை மிதக்கவைத்திருந்த அலைகடல் மாத் திரமல்ல, அந்த ஓயாத அலையாண்ட கடலை அணியார மாகக் கொண்ட அகில உலகத்தையே ஒரு உலுக்கு உலுக்கியது.

தூங்கித் தூங்கி விழுந்துகொண்டிருந்த பிரான்சு அலறி எழுந்தது. நீண்ட கொட்டாவிவிட்டு தன் கை கால்களைத் திமிரிக்கொண்டு பார்க்கும்போது தன் எதிரில் எமிலி ஜோலாவின் எழுத்துக்கள் சிங்கம்போல் கர்ஜிக் கின்றன. இதுவரை யாருமே அந்த நாட்டை ஓங்கி

அறை... தலி... ரூசோ அறைந்திருக்கின்றான், யாரை? பிரபுக்களை. பாஸ்டில் சிறையை. வால்டேர் அறைந்திருக்கின்றான், யாரை? வடிகட்டிய அயோக்கியர்களை, வஞ்சக... டாண்டன் அறைந்திருக்கின்றான், யாரை? பாராளு... ந்தை. டாக்டர் கில்லெட்டின் அறைந்திருக்கி..., யாரை? பதினாறுவது லூயி மன்னன் தலையை.

ஜோ... தன் ஆத்திரம் தீர ஓங்கி நாட்டின் முகத்திலேயே ...றைந்தான். கெட்ட எண்ணத்தால் அல்ல, உண்மைப்...தையிலிருந்து நாடு ஒதுங்கிவிடக்கூடாதே என்ற நல்ல எண்ணத்தால். குழந்தைகள் நல்வழி நடக்கக் கண்டிக்கும் தந்தையைப்போல, நாடில்லையானால் நாமில்லை என்ற அபிமான ஆத்திரத்தால், பிரான்சை நல்வழிப்படுத்துவது நமது பிறப்புரிமை என்ற பொறுப்புணர்ச்சியால். செய்வதின்னதெனத் தெரியாமல் தத்தளிக்கிறது நாடு. எப்பக்கம் ஓடி ஒளிந்துகொள்ள முடியும் அவ்வளவு பெரிய நாடு. காரணம் விளங்கவில்லை. பலம் பொருந்திய ராணுவ வீரர்கள் சிங்கத்தை வேட்டையாடக் குண்டுகளைக் கிளப்புகின்றனர். அந்த அரிமாவின் மேல்பட்ட குண்டுகள் இரும்புத் தூண்களைக் கடிக்கச் சென்ற எறும்புக் கூட்டங்களாய்விட்டன. ஜோலா சிரிக்கவில்லை. இப்போதாவது பிரான்சு நாடு தனது நீண்ட உறக்கத்திலிருந்து விழித்ததே என்பதற்காக அளவுகடந்த சந்தோஷத்தால் ஆனந்தக் கண்ணீர் வடிக்கின்றான்.

இனி நிச்சயம் நீதி தன் நெடும் பயணத்தைத் தொடங்கும் என்ற நம்பிக்கை கொள்கின்றான். நாட்டை நம்பி வாழ்பவர்கள் அநேகர். நாட்டை நாசமாக்கி அந்த நாசச் சுடலையில் பிணம் பிடுங்கித் தின்னும் நரி

கள் போல் வாழ்பவர்கள் அநேகர். அந்த ஒரு சிலர் வாழ்விலே பலருடைய உரிமை மறைந்து அடையாளந் தெரியாமல் போய்விடக் கூடாது என்பது தான் இவனுடைய பேராசையாயிருந்தது. யாருக்காகப் போராடுகிறோம் என்பதல்ல அவனுடைய விசாரணை. எதற்காகப் போராடுகிறோம் என்பது தான் அவனுடைய குறிக்கோள், எப்படிப் போராட வேண்டும் என்பதல்ல அவனுடைய கேள்வி. ஏன் போராடுகிறோம் என்பது தான் அவனுடைய சிந்தனை, எந்த வசதியை எதிர்பார்த்து இதை நாம் செய்கிறோம் என்பதல்ல அவனுடைய எண்ணம். மனித உள்ளம் எதைச் செய்ய வேண்டும் என்பதுதான் அவனுடைய முழு நோக்கம். இதனால் எவ்வளவு பகை மூளும் என்பதல்ல அவனுக்கிருந்த பயம். எப்படியாகிலும் உண்மை வெளியே வரட்டும் என்பது தான் அவனுடைய பிடிவாதம். இப்படி ஒரு போர் வீரன் இருபதாவது நூற்றாண்டில் வாழ்ந்தான் என்றால் அவன் தான் மாசற்ற மனிதன். தான் இறந்த பிறகு புகழேணியின் உச்சியிலேறி கீர்த்திக் குன்றத்தின் சிகரத்தில் வீற்றிருக்கும் பேனா போர் நடத்திய ஜோலா.

இவன் தான் கேட்டான் பிரான்சு நாட்டைப் பார்த்து, பிரான்சு நாடே! நீ உறங்குகிறாய் என்று, நானா உறங்குகின்றேன், என்றது நாடு. "இந்தா பேனாவைப்படி, தெரியும் என்று தான் எழுதிய பேனாவை நீட்டினான் பேனாவின் காவலன்."

சமூகத்தை இரண்டு கூறாக்கினான். ஒழுக்கத்தையும் உயர்ந்த பண்பையும் நாகரிகத்துக்குப் பலியிட்டு பணப் பல்லக்கின் மேல் பவனி வந்த பாரீஸ் நகரச் சீமான்கள் ஒரு சாரார். அந்தப் புண்ணியவான்களால் அழிக்கப்பட்ட கற்பின் மௌன முடிவிலேயே அன்றாடம் செத்

துக்கொண்டிருக்கும் ஏழைப் பெண்கள்மறுபெருரு சாரார். பணக்காரர்கள் தாங்கள் செய்யும் எவ்வளவு பெரிய அக்ரமத்தையும் மறைத்துக்கொள்ளப் போதிய வசதியைப் பெற்றிருக்கின்றார்கள். அல்லது அவர்களுடைய தவறுகளைப்பற்றிப் பேச ஏழைகள் அஞ்சி ஒதுங்கிவிடுகின்றார்கள். ஆனால் ஏழைகள் அறியாமையாலோ, அவ்வப்போது ஏற்படுகிற சூழ் நிலையாலோ ஏதாவது ஒரு சிறிய பிழையைச் செய்துவிட்டால், இதை ஒரு சாக்காக வைத்து சுட்டிக் காட்டிக் காட்டிப் அந்த பொறுமைப் படியில் ஏறுவதை நாகரிகம் என்று சொல்லி, அந்தப் பொல்லாத குணத்துக்குப் பொன் முலாம் பூசிவிட்டார்கள்: அதனால் அந்த நாகரிகத்தில் ஒழுக்கமுமில்லை. உண்மையுமில்லை, உயர்வுமில்லை. எப்படி இருக்க முடியும். ஆகவே இந்த விஷப் புகை நாடு முழுதிலும் கப்பிக் கொண்டிருந்ததைக் கண்டான் ஜோலா.

தலைகால் தெரியாமல் குடிப்பதை, தட்டுத் தடுமாறி விழுவதை, தையலார் கற்பைக் கெடுப்பதை, அவர்களை நடைப் பிணமாக்கி நாறுந் தோலுமாய் நடுத் தெருவில் அலையவிட்டுப் பின்னலிருந்து கைகொட்டிச் சிரிப்பதை நாகரிகம் என்றனர் என்பதைக் கண்டான் ஜோலா. இந்த நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம் விபசாரந்தான் என்பதை முடிவாக அறிந்து கொண்டான்.

## விபசாரம்

விபசாரம் என்ற வார்த்தையை உச்சரிக்கும்போதோ அல்லது ஏட்டில்படிக்கும் போதோ. அல்லது நாட்டில் கேட்கும் போதோ--கவனமெல்லாம் பெண்வர்க்கத்தின் மேல் விழுந்து விடுகின்றன. இது ஒரு பரிதாபத்திற்குறிய ஆராய்ச்சி மாத்திரமல்ல, வர்க்கத்துக்கு வர்க்கம்

பகையை வளர்க்கும் ஆராய்ச்சி. விபசாரத்துக்குக் காரணம் ஆண்களா அல்லது பெண்களா? நாடா அல்லது நாகரிகமா? வறுமையா அல்லது வளப்பமா? சட்டமா அல்லது சம்பிரதாயமா? புராணமா அல்லது புதுயுகமா? ஏழ்மையா அல்லது இறுமாப்பா? செல்வச் செருக்கா, அல்லது ஜீவிக்க முடியாத சூழ்நிலையா? இவற்றுள் எவை காரணம் என்று ஆராய்வோமானால் இரண்டுமே காரணமாகின்றன.

இரண்டு மனைகள், இரண்டு கார்கள் இருப்பதைப் போலச் சில சீமான்களுக்கு இரண்டு மனைவிகள். அதில் ஒருத்தி சாதாரண மனைவி (தாலி கட்டியவள்). மற்றொருத்தி அபிமான மனைவி (வைப்பாட்டி). இதைப்போலப் பலர் இரண்டோடும் திருப்திப் படுவதில்லை. கண்ட கண்ட பெண்களைக் கெடுத்து அவர்களை நட்டாற்றில் விடும் நயவஞ்சகச் சீமான்களும் உண்டு. தங்கள் காதல் பசி எந்த எந்த விதமாக அலையுமோ அவ்வழிகளி லெல்லாம் மனத்தைச் செல்லவிட்டுக் காமத்தால் கருத்தழிந்து, கண் பஞ்சடைந்து கடைசியில் பலவித நோய்களால் பீடிக்கப்பட்டு மாண்டவர்கள் அநேகர். இவர்கள் பணத்திமிரால், உடல் கொழுப்பால் செய்கின்றார்கள். பல பெண்கள் கணவனால் கைவிடப்பட்டு, அல்லது திருமணமே செய்துகொள்ள மனமில்லாமல், ஒரு சமயம் திருமணம் செய்துகொண்டால் ஒருவனிடமே அடங்கி ஒடுங்கி உதைபட்டுச் சாகவேண்டுமே என்ற தவறான அடிமைப் புத்தியால் ஆரம்பத்திலேயே விபசார வாணிபத்தைத் தொடங்கி விடுவார்கள். சிலர் தங்கள் உடல் வனப்பால், புல வாலிபர்களின் உள்ளத்தைக் கொள்ளையடித்து அவர்களுடைய பணத்தையும், இளமையையும் சூறையாடி அதற்கு ஈடாகத் தம் எழிலை

யும், இன்பத்தையும் கொடுத்து இறுதியில் சாரமும் சதையுமற்ற வெறும் எலும்புக்கூடாய், ஈளை, இருமல் உடலைக் குலுக்கக் கண் பார்வை மங்கிக் கடைவாயில் எச்சில் வழிய, மண்டபம், மரத்தடி, சந்து பொந்துகளில் கிடந்து, வாடி மடியும் வனிதையர் கூட்டமும் உண்டு.

நாடக மேடையிலும், திரைக்காட்சியிலும் காண்பிக்க வேண்டிய உண்மையான கருத்துக் கலையை மறைந்து அதற்குப்பதிலாகக் காமக் கலையையூட்டிப் பல மைனர்களைப் பஞ்சு பஞ்சாக்கி அவர்களின் சித்தத்தைச் சிதற அடித்து அவர்களோடு தொடர்புகொண்டு, அவர்கள் அர்ச்சிக்கும் சொல்லலங்காரங்களைத் தங்கள் காது குளிரக்கேட்பதே ரசிப்பு என எண்ணி, அந்த ஆரம்ப ரசனை நாளடைவில் ரசாபாசமாக மாறித் தம் மானத்தை மிக மலிவான விலைக்குவிற்று வயிற்றை வளர்க்க வேண்டிய அளவுக்குத் தெருவில் நின்று விலை கூறிப் பலரால் உதைபட்டு மரணத்தை எதிர் நோக்கி விதி ஒன்றிருப்பதாக நம்பி அதையும் நொந்து வீணாகச் சாகும் வனிதையர்கள் மலிந்துவிட்டனர் பிரான்சில்.

## மதுவில் மாது

இந்த விபசாரத்தைப் பெருக்கிய சீமான்கள் எந்த விதமான விழாவைக் கொண்டாடினார்கள் பிரான்சில் என்பதை நாம் தெரிந்துகொண்டால் இந்த வேண்டாத விபசாரத்தைப்பற்றி விரிவாக எழுதவேண்டிய வேலை ஏற்படாது.

பிரான்சு நாட்டுச் சீமான்களெல்லாம் பாரிசில் கூடுவார்கள். அங்கே ஒரு அழகான மண்டபத்தில் ஒரு ஆள் உட்கார்ந்து படுத்துக் கைகால்களை நீட்டிக் குளிக்கிற

அளவுக்கு ஒரு தொட்டியிருக்கும். அந்தத் தொட்டியில் எல்லாவிதமான மதுபானங்களையும் ஊற்றி அதை நிரப்பு வார்கள். அதில் ஏற்கெனவே யார் அழகி என்று க்கடந்து போன ஆண்டு நடந்த இதே விழாவில் தீர் மானிக்கப்பட்டிருந்த அழகியைக் குளிக்கச் செய்வார் கள். உடை உடுத்திக்கொண்டுதான் குளித்தாளா வேறு எப்படிக் குளித்தாள் என்று தயவுசெய்து கேட்கா தீர்கள். அவளை உடை உடுத்த விட்டால் இந்த விழா வுக்கு மகிமை ஏது? நன்ருக அவள் உடலைப்பார்த்து ரசிப்பதற்காகக் கண்ணுடிபோட்டுக் கொண்டிருந்தார் களே தவிர அவள் உடல் உறுப்புகளுக்கும் இவர்கள் கண்ணுடிப் பார்வைக்கும் இடையே எதுவும் குறுக்கிட வில்லை. பார்த்து ரசித்துப் பரவசக் கூத்தாடுவார்கள். அந்த மதுவை ஒருவர் மேல் ஒருவர் அள்ளித்தெளித் துக் கொள்வார்கள். அவள் அதில் குளித்தெழுந்த வுடன் அதில் இருக்கும் மதுபானத்தை ஆளுக்குக் கொஞ்சமாக அருந்தி அந்தப் போதையிலேயே வேரெரு ருத்தியை அடுத்த ஆண்டின் அழகி என்று பிரகடனப் படுத்திவிடுவார்கள். அது முதல், அவள் மோட்டி, சிங்காரி. அவள் குளித்து மிகுதியான மதுபானத்தைப் பங்கிட்டுக் கொள்ளும்போது எனக்கு, உனக்கு என்று உதைபட்டுச் சாவார்கள்.

இந்த விழா ஆண்டு தோறும் நடைபெற்று வந்தது. இதனல் பெருகிய விபசாரம் நாட்டின் எல்லையோடு நின்றுவிடவில்லை. ஆகாயத்திலும், ரயிலிலும், கடலிலும் பிரயாணஞ் செய்ய ஆரம்பித்துவிட்டது. பல வெளி நாட்டு வியாபாரிகள் வந்து தங்கி வேலைகளை முடித்துக் கொண்டு திரும்பும்போது இந்த விலைமாதர்களும் அவர்களோடு பிரயாணஞ் செய்வார்கள். அந்த வியா

பாரி தன் நாட்டின் துறைமுகத்தையடைந்தவுடன், பிரான்சுக்கு வரவிருக்கும் வேறோர் வியாபாரியோடு தொடர்புகொண்டு மீண்டும் தன்நாட்டுக்கு வந்து சேர்ந்துவிடுவாள். இப்படி இந்த விபசார வியாபாரம் செல்லாத நாடுகளே ஐரோப்பாவில் இல்லை என்று சொல்லுமளவுக்குப் பிரயாணிகளைக் கொத்தித் தின்னும் கழுகுகளாய்ப் பறந்துகொண்டிருந்தார்கள் பாரீஸ் மங்கைகள்.

காமமென்ற குளத்தில் நீராடாத பாரீஸ் சீமான், பரத்தையரின் பாதத்தில் விழாத வெளிநாட்டுச் செல்வர்கள், மொத்தத்தில் பாபிகளெனக் கருதப்பட்டார்கள். இரவு பகலாகவும், பகல் இரவாகவும் மாற்றியமைக்கப் பட்டுவிட்டது. தங்கள் ஜீவியத்தின் இலட்சியமே காமக்கலையின் உச்சியைக் கண்டுபிடித்து விடுவதுதான் என்று ஆண்களும் பெண்களும் ஆனந்தக் கூத்தாடினார்கள்.

பெயருக்கு முன்பு ஏதாவதொரு அடைமொழியைப் போட்டுக்கொள்வதைப்போல வாழ்நாளுக்குள் இரண்டொரு வனிதையர்களின் மையலில் வழுக்கி விழுந்திருக்க வேண்டும். வாத நோய், ரணநோய், குறையாத குன்ம நோய், தீராத காச நோய், திண்டத்தகாத குஷ்ட நோய், திணறித் திணறிவரும் இருமல், இளைப்பு, பெருமூச்சு பிளவு, ராஜப்பிளவு, புற்றுநோய் பொல்லாத பிடிப்பு நோய், ஏதாவதொரு முத்திரையை அணிந்திருக்க வேண்டும்.

"இறந்துவிட்டான், மகாவீரன், ஏதோ இருமல் இளைப்பு நோய்களாம், என்றாலும் இருபது மங்கைகளுக்கு மேல் ஆண்டு அனுபவித்தான்; கொஞ்சமும

சளைக்காதவன் ;" என்றெல்லாம் அவனுடைய கல்லறைக்கு முன்பு பேசப்படவேண்டும். இப்படிப் பெருகிப் போன இந்த விபசாரத்தின் வியாபாரிகள் ஆண்களா, பெண்களா என்று தெரிந்துகொள்ள விரும்பினுல் அது வீண் விவாதத்துக்கொப்பாகும். பெண்கள் முந்தியிருந்தால் ஆண்கள் தடுத்திருக்கலாம். ஆண்களே தொடங்கியிருந்தால் பெண்கள்கூடக் கண்டித்திருக்கலாம். அல்லது இருசாராரையுமே சர்க்கார் தடுத்திருக்கலாம். ஆனுல் யாரும் இதைத் தடுக்க முன்வரவில்லை. ஏனெனில் இந்தக் கேவலமான விபசாரத்திற்கு அவ்வளவு உன்னதமான இடமளிக்கப்பட்டிருந்தது அவரவர்கள் உள்ளங்களில். ஆகவே அதையாராலும் அகற்ற முடியவில்லை. ஆனுல் எதற்கும் ஒரு முடிவு உண்டல்லவா? அந்த முடிவை அளித்தான் ஜோலா.

நான்கு

ஜோலாவும், அவனது நண்பன் செஸானேயும் ஒரு நாள் மிக ஏழைகள் சாப்பிடும் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

வெளியே, ஓடு! நிற்காதே, எருமை மாடே! எதுங் கெட்ட கழுதையே! சதையை வளர்க்கச் சதையை விற்கும் சண்டாளியே! எத்தனை முறை என்னிடம் உதை பட்டிருக்கிருய்? ஓடு, பிடி ஓட்டம், பிடி, பிடி, விடாதே, அந்தக் கிழவியை விடாதே, அந்தக் கிழவிதான் பல மைனர்களுக்கு இந்த விபசாரிகளைப் பேரம் பேசுகிருள் என்ற குரலும், அதை ஆமோதிப்பதைப்போல் 'பளீர் பளீர்' என்ற சவுக்கடி சப்தமும் கேட்கிறது. அந்தப் போலீஸ்காரர்கள் இப்படிப்பேசியதும், ஏசியதும், அடித்ததும், மாடுகளையோ, குதிரைகளையோ, கழுதை

களேயோ, அல்ல. வாழத் தெரியாத, அல்ல அல்ல, வாழமுடியாமல் வழி தவறிப்போன வனிதையர்களே.

பெண்களின் பயங்கர ஒலி நாலாப் பக்கங்களிலிருந்துங்கேட்டது ஜோலா கரண்டிகளைக்கீழே வைத்து விட்டு ஜன்னலோரமாக வந்து பார்த்தபொழுது போலீஸ்காரர்கள் மூர்க்கத்தனமாகப் பெண்களை விரட்டுகிறார்கள். அவர்களுடைய சவுக்கடியிலிருந்து தப்பித்துக் கொள்ளப் பெண்கள் இங்குமங்குமாக ஓடுகின்றார்கள். விபசாரிகளை விரட்டுகிறார்கள். விபசாரத்தையல்ல. விபசார விடுதிகள் எல்லாவற்றிலும் புகுந்து போலீஸ் தடியடி தர்பார் நடத்துகிறது. அந்த வீடுகளிலிருந்த ஆண்களும் அவமானம் சகிக்க முடியாமல் சமையலறை வழியாக ஓடித் தோட்டச் சுவர்களைத் தாண்டி ஓடித் தப்பித்துக் கொள்ளுகின்றார்கள்,

மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்க, ஒரு மங்கை ஜோலா சாப்பிட்டுக் கொண்டிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்து ஒரு தூணின் பின்னால் ஒளிந்து கொள்கிறாள், அங்கேயும் அவளைவிடாமல் போலீஸ்காரன் பின்னால் விரட்டிக் கொண்டுவருகிறான். அங்கிருந்தும் அவள் தப்பிச் செல்லமார்க்கமில்லை. நடுங்குகிறாள். கண்டான் ஜோலா. காரிகையை அருகில் அழைத்தான். பின்தொடர்ந்து வந்த போலீஸ்காரனைத் தடுத்து நிறுத்தி, இவள் எனக்குரியவள்" என்று சொல்லிப் போலீஸ்காரனை அனுப்பிவிட்டான். பயத்தாலும், திகிலாலும், அடியாலும் அலக்கழிக்கப்பட்ட அந்த மங்கையை அருகில் அழைத்தான். இருவரும் அமர்ந்து சிற்றுண்டியருந்தினர்.

வறுமை அவளை எவ்வளவோ வாட்டி வதைத்து விட்டிருந்தது. எனினும் வனப்புக் குன்றாதிருந்தாள்.

தினமும் அவள் வயிருர உண்டாளா என்பதும் சந்தேகந்தான். எனினும் அவளுடைய தேஜஸ் குறையவில்லை. பாவம்! இவ்வளவு அழகான மலரைக் கையில் வைத்து அழகு பார்க்காமல் கசக்கிப் பிழிந்து விடுகிறது அவளுடைய வறுமை. அழகுதான் பெண்களுக்கு ஆபத்தா, ஆபத்துத்தான் உருவெடுத்துப் பெண்களுக்கு அழகாயமைந்து விடுகிறதா என்ற சிந்தனைக்கிடையிலேயே இவளைக் கவனிக்கின்ருன் ஜோலா "ஓவியப் புலவனே! இவளுடைய உருவத்தை எழுது" என்று தன் நண்பனை அழைத்து அவளுடைய உருவத்தை எழுதச் சொல்லுகின்ருன் ஜோலா.

அவள் தன்னுடைய வாழ்க்கை வரலாறுகளைச் சொல்லும்போது வார்த்தைகள் ஓட்டமில்லாமல் தேங்கித்தவித்து ஒன்ருேடொன்று பின்னிக்கொண்டு தழுதழுத்த குரலில் வருகின்றன. கண்ணீர் அருவிகள் அவளுடைய கன்னத்தின் அழகைக் கெடுத்து விடுகின்றன. தன்னுடைய பழைய நிலைமைகள், புதிய சீரழிவுகள், பாரீசுக்கு வரும்போது தன் வயது, வர ஏற்பட்ட காரணம் ஆகிய வரலாறுகளை எல்லாம் அழுகை எனும் அடைமழைக்கிடையிலேயே சொல்லித் தீர்த்துவிட்டாள்.

இதையெல்லாம் கூர்ந்து கேட்டுக்கொண்டிருந்த ஜோலா ஏழெட்டு தரம் விடவேண்டிய மூச்சையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து ஒரு பெருமூச்சாய் விட்டான். அந்தப் பெருமூச்சில் ஒரு பெருங்கதை பிறந்தது. இவளுடைய இடிந்த வாழ்விலிருந்து ஓர் சிறந்த இலக்கியம் பிறந்தது. அப்பேதைப் பெண்ணின் வாழ்விலிருந்து பிரான்சின் போதை தெளிந்தது. உலக வரலாறே தன் கண்முன் தோன்றுவதைப்போல நினைத்

தான். ஆவேசத்துடன் தன் நண்பனை அழைக்கிறான். அவள் வசித்துவந்த அறையில் நுழைந்து சில கடிதங்களையும் ஒரு புகைப்படமும் எடுக்கிறான். அவற்றின் மூலந்தான் இவள் பெயர், நானா என அறிய முடிந்தது.

அன்றே எழுதத் தொடங்கிவிட்டான், 'நானா'. படி இவன் எழுதியது, நானாவை சந்தோஷப் படுத்துவதற்காக அல்ல. நண்பனின் சித்திரத்துக்கு மதிப்பளிக்கவோ, மார்க்கட்டில் இடம் பிடிக்கவோ அல்ல. நல்லோர்கள் தன் முயற்சியில் பங்குகொள்ள, நாட்டைத் திருத்த, வேண்டாதவைகளை விலக்க, நாட்டின் கண்ணியத்தைக் காப்பாற்ற, நாய்போல் திரியும் நங்கையர்களுக்கு நல் வாழ்வளிக்க, விபரீதத்தை அபராதத்தின் மூலம் தடுக்காமல் அடியோடு தொலைக்க, விபசாரத்தின் கொடுமைகளுக்கு யார் காரணம் என்பதை அகிலமறிய எழுதினான். பயன் கருதாது செய்யத் துணிந்தான். பாவம், புண்ணியம் என்ற பாகுபாடில்லாமல் பரோபகார சிந்தையோடு செய்ய முன்வந்தான். பல பகல்கள், பல இரவுகள் ஓயாது எழுதி எழுதி ஓர் ஒப்புயர்வற்ற இலக்கியத்தை, 'நானா' என்ற பேதைப் பெண்ணின் பெயரால் மகுடமிட்டுப் பிரான்சு நாட்டையும், பரந்த பாரையும், பவனி வர அச்சகத்திலிருந்து வெளியே அனுப்பிவிட்டான்.

உண்மை நானாவை விரட்டி விரட்டியடித்த போலீஸ்காரன் இந்த நானாவை வாங்கிப் படிக்கின்றான். எந்தச் சீமான் உண்மை நானாவைப் பார்த்து எச்சில் துப்பினானோ அந்தச் சீமான் தன் கடைவாயில் எச்சில் வழிந்தோடுவதைக்கூடக் கவனிக்காமல் இந்த நானாவைப் படிக்கின்றான். உண்மை நானாவைத் தூற்றியவர்கள் இந்த நானாவைப் போற்றுகின்றனர். இதை எழுதியது எழுத்

தாளன் ஜோலா என்பதற்காக யாரும் படிக்கவில்லை. எழுத்துக்கள் நானாவைப் பற்றியவை என்பதற்காகப் படித்தார்கள். இலக்கியச் சுவை மிகுதி, இன்பம் தரும் என்ற சந்தோஷத்தால் படிக்கவில்லை. இடிந்து குட்டிச் சுவராய்ப் போன ஒரு பேதைப் பெண்மணியின் வாழ்க்கை வரலாறு எனக் கண்ணீர் சிந்தச் சிந்தப் படித்தனர். இது சாகாவரம் பெற்ற நூல் என்பதற்காக யாரும் படிக்கவில்லை. சமூகக் கேடுகளைத் தாக்கித் தகர்த்தெறியும் தலை சிறந்த நூல் என்பதற்காகப் படித்தார்கள். உண்மை நானா எங்கேயும் தங்க முடியாமல் விரட்டப் பட்டாள். ஆனால், இந்த நானா, பணக்காரர்கள் பஞ்சணையிலே, தலையணையின் கீழே, சீமாட்டிகளின் கைப் பைக்குள்ளே படுத்துக் கொண்டிருக்கின்றாள். கணவனுக்குத் தெரியாமல் மனைவி வாங்குவாள். மனைவிக்குத் தெரியாமல் கணவன் வாங்குவான். இந்த இருவருக்கும் தெரியாமல் கிழமாமனாரும் மாமியாரும் வாங்குவார்கள். இவர்கள் அவ்வளவு பேருக்கும் தெரியாமல் வீட்டு வேலைக்காரன் வாங்குவான். ஒருவராவது நானாவைப் பகிரங்கமாக வாங்கினார்களா என்றால், இல்லை. ஆனால், ஒருவர் வீட்டிலாவது நானா இல்லாமலிருந்தாளா என்றால் அதுவும் இல்லை. எல்லாருடைய வீட்டிலேயும் நானா இருந்தாள். புத்தகக் கடைக்கு நானாவை வாங்குவதற்கென்றே வருவார்கள். எடுத்த எடுப்பிலேயே நானா ஒன்று கொடு என்று கேட்கமாட்டார்கள். வேறு எதை எதையோ புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, சுற்றுமுற்றும் யாருமில்லாத சமயம் பட்டார் என்று பணத்தைத் தூக்கி எறிந்து நானாவை வாங்கிக்கொண்டு சட்டைப்பையில், குடையில், குல்லாவில், கூடையில் வைத்து மறைத்துக்கொண்டு போய் விடுவார்கள். பகிரங்கமாக வாங்கத் தைரியமில்லை.

படிக்காமலிருக்கவும் முடியவில்லை. ஆகவே எல்லாரும் வாங்கிவிட்டார்கள் எமிலி ஜோலாவின் நானுவை. ஆனால் இவை எல்லாம் உண்மை நானுவுக்கு ஒன்றும் தெரியாது.

### நானு வரலாறு

பதினுருவது வயதில் ஒரு பாலகனை ஈன்றுள். கணவன் ஒரு சொத்துக்காரன். சமாதி கட்டிக் கட்டிப் பழகியவன். சாதாரணச் சண்டையைக்கூடச் சண்டமாருதப் புயலாக்கி இவளுடைய வாழ்க்கைக்குச் சமாதிகட்டிவிடத் தொடங்கினன். தெரிந்துகொண்டாள். குழந்தை லூயிசை வேறொருத்தியிடம் ஒப்படைத்துவிட்டுத் தான் ஒண்டியாகப் பாரீஸ்நகர் நோக்கி ஓடினள். கணவனைப் போல் கல்லையும், மண்ணையும் சுமந்து பிழைக்க அல்ல. காமக்கனல் மூட்டி நாடகமேடையில் அரசோச்சி, நளினமான வாலிபர்களைத் தேடி நாகரிக வாழ்வு வாழ்ந்தாள், நல்ல உடல் வனப்பு இருக்கும் வரையில். அரசிளங்குமரன் தன் அடிபணிவதையும் சீமான் கௌண்டமப்பாட், தன் பவளவாயிலிருந்து சிந்தும் சிரிப்பைத் தாங்கத் தன் இருகைகளை ஏந்திக்கொண்டிருப்பதையுங் கண்டாள். தான் வளர்க்கும் நாய்க்குட்டியிடமாகிலும் அன்பு காட்டுவாள். ஆனால் இவனை மிக மிகக் கேவலமாக நடத்தினள். யாரை? கண்டோர் எழுந்து நிற்கும் தகுதிபெற்ற கௌண்டமப்பாட் என்ற மரியாதைக்குரியவனை.

வெரைட்டி தியேட்டரில் வீனசாகத் தோன்றினள் நாடகக் கலையின் நவயுகமாக விளங்கினள். வைராகிய உள்ளங்களே வாய்விட்டுக் குளறி நானு, நானு என்று பூஜித்துக் கொண்டிருக்கும்போது, வாலிப உள்ளங்கள் பட்ட அவஸ்தையைச் சொல்லவே முடி

பாது. பிரான்சு நாட்டு வாலிபப் பட்டாளங்களையே தன் வேல்விழி வீச்சால் சரணடையச் செய்தாள்.

நானா! உன் மெய்க்காதலன் அவனா, நானா என்று தங்களைத் தாங்களே கேட்டுக்கொண்டார்கள். அழகின் குன்று, பெண் குலத்தின் பேரரசி, காதலின் ஓவியம் என வர்ணித்தார்கள். அவளுடைய கரத்தைத் தொட்டால் செய்த கர்மங்களெல்லாம் ஒழிந்துவிடும்.'' நான், அவள் தலையைத் தாங்கும் தலையணையாகப் பிறந்திருக்கக் கூடாதா அல்லது அவள் சாப்பிடும் தட்டாகப் பிறந் திருந்தாலும் அவள் கை பட்டிருக்குமே?'' போகட்டும். அவள் உதட்டில் பூசும் செஞ்சாந்தாகவாவது பிறந்திருக் கக் கூடாதா? அப்போதாவது அவளுடைய உதட்டில் என் ஆசை முத்தத்தை விதைத்திருக்க முடியுமே என்று கல்விமன்றம் கலாசாலை எல்லாம் இப் பேச்சுத்தான். மொத்தத்தில் அவள் எல்லோரையும் பைத்தியமாக்கிவிட் டாள். இல்லை, இல்லை. அவள் நல்லவள். இளகிய மனமுடையவள். பழமுறை ஏழைகள் சங்கத்திற்கு நன் கொடையளித்திருக்கிறாள். ஆகவே அவள் கொடியவ ளல்ல. அவளுடைய அழகு பிரான்சு நாட்டு வாலிபர் களையே மதிமயங்கச் செய்துவிட்டது.

ஒரு பக்கம் பணக்காரன், இவளுடைய பருவச ணைக்குப் பக்கத்திலே நின்று கெஞ்சுகின்றான். மற்றோர் பக்கம், இவள் தன்னினும் சிறு வயதுடைய ஜார்ஜ் என் பவனை நேசிக்கிறாள். கௌரவம் இவளுடைய மையலில் வீழ்ந்துவிட்டதால் தன் சொந்த மனைவி, மற்றொருவனிடம் தொடர்பு கொள்கிறாள். ஆனாலும் மேம்பாட்டு இவளிடமே காமப்பிச்சை கேட்ட வண்ணம் இருக்கின்றான். பல பெண்கள் ஒழுக்கம் தவறி நடக்க நானா காரணமானாள். நானா ஒழுக்கம் தவறி நடக்க யார்

...ரணமானுர்கள்? சிந்திக்க வேண்டிய விஷயந்தான். ...முவே பிறந்தாள். அவளை வாழவைக்கவில்லை வஞ் சனைச் சமூகம். எங்கெல்லாமோ சுற்றித்திரிந்து மீண்டும் ...வனைத் தேடித் திருமணம் செய்துகொண்டு கண்ணிய... வாழ்க்கையைத் தொடங்கினுள்.

### பாதகன் பாண்ட்டன்

இந்தப் பாதகப் பாண்ட்டன்தான் நானுவின் இரண் ...து சட்டரீதியான கணவன். இவன் கணவனுமல்ல, ...கனுமல்ல. கணவனுயிருந்தால் கண்ணியமாக நடத் தியிருப்பான். காமுகனுகயிருந்திருந்தால் அவள் காலடி யில் வீழ்ந்து கிடந்திருப்பான். இவன் திருடன். இவள் வைத்திருந்த ஏழாயிரம் பிராங்குகளை அதட்டி வாங்கிக் கொண்டான். அன்ருடம் செலவுக்குக்கூடப் பணம் கொடுக்கமாட்டான். "என்னுல் பணம் கொடுக்க முடியாது. எப்படியாகிலும் எனக்குச் சாப்பாடு போடடுத் தான் தீரவேண்டும். இல்லாவிட்டால் அடிவிழும்." என்று அதட்டிவிட்டுக் காலையில் போனுல் இரவுதான் வருவான்.

என்ன செய்வாள்? பாவம்! வட்டில் இருந்ததெல் லாம் விற்ருள். இனி விற்பதற்குத் தன்னைத் தவிர வெருென்றுமில்லை. இந்த நிலையில் அவன் கொடுக்கும் அடியையும், உதையையும், அறையையும் வாங்கிக் கொண்டே அவனை உண்மையாக நேசித்து வந்தாள். படாதபாடு படுத்தினுன். பரவாயில்லை. தாங்கிக் கொள்ளலாம். பண நெருக்கடியை வேறு கொண்டு வந்து வைக்கின்ருனே. எங்கே? எப்படி, எந்த நாணய மான தொழிலைச் செய்து சம்பாதிப்பது? கணவனில்லாத போது வெளியே சென்று விபசாரம் செய்து பணத்தைச்

சம்பாதித்துக் கணவன் வீட்டிற்கு வருவதற்குமுன், அவனுக்கு வேண்டிய ருசியான உணவைச் சமைத்து விடுவாள். அந்த மானங் கெட்டவனும் கொஞ்சமும் சிந்திக்காமல் விபசாரத்தால் வந்த உணவை யருந்திச் சந்தோஷப்படுவான். அந்த மாமிசப் பிண்டம்." ஏன் இதில் உப்பில்லை என்று கேட்குமே தவிர, ஏது இதற்குப் பணம் என்று கேட்கவே கேட்காது.

ஓடினலும் விடமாட்டான். விவாக ரத்து என்ருலும் உயிரை வாங்கி விடுவான். முணுமுணுத்தால் தாடையில் அறை விழும். இப்படி நடத்தினன் இந்த நாடக மேடை ராணி, நாஞவை. இவ்வளவு கொடுமைகளுக்கும் தப்பிப் பிழைத்து அவனைத் திருப்திப்படுத்துவதற்குண்டான ஒரே வழி விபசாரம் செய்வதுதான். இந்த நிலையில் அமைந்திருந்த இந்த இருதுருவங்களும் ஒருநாள் நாடகம் பார்க்கப் போனர்கள். வீட்டுக்குத் திரும்பிய வுடன் நாடக விமர்சனத்தில் இருவருக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. விட்டான் ஒரு அறை ஓங்கித் தாடையில். உலகமே பலமுறை சுற்றி விட்டதைப் போல் தானும் சுற்றி நின்ருள். தலையணை ஈரம். வலி தாங்க முடியாமல் புரண்டு புரண்டு அழுதாள், அவன் பக்கத்திலேயே படுத்துக் கொண்டு. இதுவும் அவனுக்கு வேதனையாகப் பட்டது. மீண்டும் விட்டான் மளமளவென்று உதையும், குத்தும். உடலெல்லாம் ரத்தக்காடு—உடையெல்லாம் ரத்தக்கறை. என்ன செய் வாள்? பொறுமை இவளைப் பார்த்துச் சிரிக்கிறது. இவள் குற்றேவலுக்குப் பலர் காத்திருந்தார்கள். ஆனல் இவள் இன்று குத்துயிரும், குலையுயிருமாகக் குற்றேவல் செய்து கொண்டிருக்கிருள். காலம் இவளைக் கடுமையாகச் சோதிக்கிறது. இவளுடைய புன் சிரிப்பிற்குப் பூலோகமே மகிழ்ந்து கூத்தாடிற்று. ஆனல் இன்று அந்தச் சிரித்த

வாயில் செங்குருதி கொப்பளிக்கிறது. அப்படியும் வாழ்க்கையை நடத்தினுள் என்பதற்குப் பதில் நகர்த்தினுள் என்னலாம். இந்த விபசார வேலையில் போலீஸ் அபாயத்திலிருந்து அடிக்கடி தப்ப வேண்டிய நிலை ஏற்படுகிறது. இதனுல் இவள் ஒரு போலீஸ் அதிகாரியையே கையில் போட்டுக்கொண்டு அவனுடைய உதவியால் பலமுறை அந்த அபாயத்திலிருந்து தப்பியிருக்கிருள்.

இந்த நிலையில் சில நாட்களில் தன் கணவன் வீட்டுக்கு வருவதற்குமுன் வந்து சேரமுடிவதில்லை. ஒரு நாள் இரவு அதிக நேரம் கழித்து வருகிருள். கணவன் என்ற பெயரோடு இவளைக் கொத்தித்தின்று கொண்டிருக்கும் காதலன், முன்பு இவர்களுடைய ஆரம்பச் சண்டைக்குக் காரணமாயிருந்த நடிகையோடு உள்ளே இருந்தான் வெளியே புறப்பட்டு விட்டாள் நாஞ. பழையபடி தெருவிலே அலைந்தாள். தன்னுல் பலமுறை உதாசீனம் செய்யப்பட்ட மாப்பாட் கிடைத்தான். ஆர்லென்ஸ் என்னும் அமைதியான இடத்தில் அழகான மாளிகை அமைத்துத் தந்து இவளுடைய அபிமான கணவனுய் விட்டான். நடுத்தெருவில் அலைந்த நாரீமணி, நவமணிகள் கொழிக்கும் செல்வச் சீமாட்டியாக பாரிஸ் நாகரிகத்தின் சாயலாக, அழகின் ராணிபோல் வீற்றிருந்தாள். இவளைப்போல் உடுத்துவது, அணிவது, அருந்துவது எல்லாம் மற்ற சீமாட்டிகளால் காப்பியடிக்கப்பட்டது. எங்கே பார்த்தாலும் இவளுடைய படம். தன் பேரால் ஒரு பந்தயக் குதிரையை வாங்கினுள். மற்றக் குதிரைகளை ஓட்டத்தில் பின்னடையச் செய்து மங்காத கீர்த்தியோடு விளங்கியது குதிரை நாஞ. பொருமைக்காரர்கள் அதன் லாயத்துக்கே தீ வைத்துக்கொளுத்தி அதையும் சாகடித்து விட்டார்கள்.

முந்நூறு பிராங்குகள் கொடுத்துவிட்டுத் தன் மகன் லூயிசை மீட்டுக்கொண்டு வரமுடியாமல் கஷ்டப்பட்ட நானு, இப்போது நடப்பதற்காக மாளிகையின் கீழே விரிக்கப்பட்டிருக்கும் ரத்தனக் கம்பளத்தின் விலை இரு பதினாயிரம் பிராங்குகள். சீனத்தின் பூ வேலைகள் மிக்க தட்டுகள், பதின்மூன்றுவது லூயி மன்னன் மாளிகையில் இருந்ததைப் போன்ற மேஜை, கட்டில், நாற்காலிகள், சாய்வு நாற்காலிகள் வைத்துக்கொண்டு இவ்வளவு ஆடம்பரத்தோடு வாழ்ந்து மீண்டும் வீழ்ந்துவிட்டுத் தெருவுக்கு வந்துவிட்டாள். இந்த நிலையில்தான் ஜோலாவின் பேனுவில் அகப்படுகிருள்.

### காரணம்

நானு சரிந்து வீழ்ந்துவிட்ட சோகமிக்க வரலாற்றை எழுதுவதின் மூலம் நியாயத்தைக் கண்டுபிடிக்கலாம் என்ற நினைப்பு அவன் நெஞ்சத்தைத் தட்டிக் கொண்டிருந்தது. நானு எழுதுவதின் மூலம் அது நாட்டின் முகத்தில் கரி பூசுவதாகும் என்பதும், அதன் விளைவாக நாலு பக்கங்களிலிருந்து வரும் எதிர்ப்புகளைத் தன்னுல் எதிர்த்து நிற்க முடியாது என்பதும் அவனுக்கு நன்முகத் தெரியும். என்றுலும் எழுதினன். தான் ஓர் ஏழை, அன்றிருந்த அரசியலில் ஒரு குறைந்த பட்ச அந்தஸ்த்துடையவனல்ல, என்றுலும் எழுதினன். இவனை ஒரு பெரிய எழுத்தாளனுக அறிஞர் உலகம் ஒப்புக்கொள்ளவில்லை என்றுலும் எழுதினன். உண்மையான பொதுநலவாதிகள் எப்போதுமே எதையும் சுயநலக்குறிக்கோளோடு செய்ய மாட்டார்கள். தான் செய்யப்போகும் காரியத்தின் விளைவு கெட்டதாக இருந்தால் அந்தக் கெடுதலைத் தான்மட்டிலும் அனுபவித்து, நன்மையாக இருந்தால் அதை நாட்டுக்கே பொதுவாக்கிவிடும் பெருங்குணத்தார்களைத்தான் எந்த நாட்டிலும் பொதுநலத்தொண்டர்கள் என்று

...ற்றுவது வழக்கம். அந்த முறையிலேதான் விளைவு களை எண்ணுமல் எப்படியாகிலும் உண்மைகள் வெளி ...ம் என்ற ஒரே குறிக்கோளோடு தீட்டினன்.

...ல் மிக மோசமான விபசாரிகளைச் சந்திக்கிருக் ... என்பதல்ல; விபசாரத்தையே சந்திக்கிருக்கின் ... அந்தக் கொடுமை ஏற்படுவதற்குக் காரணமா யி... கயமைத்தனத்தையும் அதன் கர்த்தாக்களான கய...களையும் களத்துக்கழைக்கின்ருன்.

ஜோலாவுக்கு இப்போதுதான் தன்னைச் சுற்றிலும் பார்த்து நுணுக்கங்களை உணர நேரம் கிடைத்தது உள்ளேவறுமையாலும், துன்பத்தாலும் துடித்துக்கொண் டிருந்த உலகின் ஒவ்வொரு பகுதியையும் நன்கு ஆராய ஆரம்பித்தான். அவன் ஆராய விரும்பிய உண்மைகள் மேல்பூச்சால் மறைக்கப்படாததால் சந்து பொந்துகளில் பொதிந்து கிடந்தன ஒவ்வொரு உண்மையும் வைரம் போன்று ஒளி விட்டுத் தெரிந்தது. சோர்வும், வெறுப்பும் கொள்ளாமல் ஜோலா தான் பார்த்தவைகளைக் குறிப் பெடுத்தான். பெரும்போருக்கு ஆட்களைத் திரட்டுவ தைப் போல ஜோலா சமூக அநீதிகளைத் திரட்டிக்கொண் டிருந்தான். இரவில் வெகு நேரம் வரையிலும் பாரிஸ் நகரத்துச் சேரிகளில் உலவுவான். வீதியோரத்திலும் சாக்கடைப் பக்கங்களிலும், இடிந்த மனைகளிலும் ஆற்றுப்படிக்கட்டுகளிலும் பெருவாரியான மக்கள் குளிர் பொறுக்க மாட்டாமல் நடுங்கிக் கொண்டிருப் பதைக் கண்ணுற்ருன். இருட்டின் கறைகள், இருண்ட வாழ்வினர், தொங்கும் நரம்பின் குப்பைகள், தேய்ந்து வரும் எலும்பின் கூடுகள், சுருங்கி வரும் தோலால் செய்யப்பட்ட நகர்ந்து செல்லும் உயிர்ப்பொம்மைகள்

சமூக பலிபீடத்தில் சாய்ந்த மாந்தர்கள் அனைவரையும் கண்ணுற்றான்.

ஜோலா சிறு சிறு கதைகள் எழுதிப் பத்திரிகைக் காரர்களிடமிருந்து உதவி பெறுவான். புத்தகக் கடைக் காரர்களுக்கு ஜோலாவின் போக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய கீழ்த்தரமான கட்டுரைகளால் கடையின் மதிப்புக் கெட்டுவிடுமென அவர்கள் பயந்தார்கள். அதற்கேற்றாற்போல் கலைச் சீமான்களையும், அரசியல் கள்வான்களையும் கண்டித்து எழுதியதால் இரண்டு முறை வேலையிலிருந்து நீக்கப்பட்டான். இப்படித் தன்னுடைய இருபத்தாறுவது வயது முதற்கொண்டு தன் பேனாவை நம்பியே வாழ்ந்தான். ஜோலா மனம் தளராதவன். ஒவ்வொரு மணி நேரத்துக்கும் அட்டவணை போட்டுக்கொண்டு தன் எழுத்துப் போரைத் தொடங்கினான். நூல்களைப் பதிப்பிக்க அவனுடைய நண்பரொருவர் முன் வந்தார். ஜோலாவின் கதைகள் கட்டுரைகள் ஒவ்வொன்றாக வெளிவர ஆரம்பித்தன. அவைகள் சமூகத்தின் அநீதியையும், அரசியல் அக்ரமத்தையும் வன்மையாகக் கண்டித்தன. மலையுச்சியிலிருந்து அடிவாரத்தை நோக்கி விரைந்துவரும் பேராறுகளைப்போல் கருத்துமிக்க கட்டுரைகள் ஜோலாவின் பேனாவிலிருந்து கிளம்பின. அவனுடைய நாவல்கள் அனைத்தும் அடிப்படையான கருத்துக்களின் மீது கட்டப்பட்டவை. தான் கண்ட உண்மைகளை எழுச்சிதரும் வகையில் தரணிக்கு எடுத்துக் காட்டினான். சமூக அமைப்பில் கண்ட ஏற்றத் தாழ்வுகளை உலகுக்கு எடுத்துக்காட்டினான். கொடுங்கோலர்களை எதிர்த்தான் குருமார்களைச் சாடினான். குறைமதியினரைக் கண்டித்தான். வஞ்சகர்களைத் தன் எழுத்தம்பால் வாட்டினான் அவனுடைய நாவல்களில் நிலையற்றோர், வஞ்சகர்கள்

அனுதைகள், ஆணவக்காரர்கள், திருடர்கள், சோம்பேறிகள், குடிகாரர், கனவு காண்போர், நலிந்த உழவர், ஒடுக்கப்பட்ட உழைப்பாளிகள், கொடிய முதலாளிகள், பேராசைப் பாதிரிமார், முதுகெலும்பற்ற கலைவாணர்கள், வெறிகொண்ட மதப்பித்தர்கள் அனைவரும் சித்திரிக்கப் பட்டனர்.

### சமூகத்தின் உயிர்நாடிகள்

சமூகத்தின் உயிர்நாடிகள் தொழிலாளிகள்தாம் என்பது ஜோலாவின் எண்ணம். தொழிலாளர்களைப் பற்றிய நூல்களைப் படித்துத்தெரிந்துகொள்வதைக் காட்டிலும் அவர்களையே நேரடியாகச் சந்தித்து எல்லா உண்மைகளையும் தெரிந்துகொள்வதும், அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் ஏற்படுகிற இடுக்கண்களை நேரில் கண்டறிவதும் தன் முயற்சிக்கு அதிக உதவியாக இருக்கும் என்று கருதிய காரணத்தால்; இரவு பகலென்று பாராமல், பிரான்சு, பெல்ஜியம் முதலான நாடுகளில் சுற்றித் தான் நேரடியாகக் கண்டவைகளை 'ஜெர்மினல்,' ('Germinal') என்ற நூலில் மிகவிளக்கமாக எழுதியிருக்கின்றான். அந்த ஜெர்மினல் என்ற நூல் பெரும்பாலும் நிலக்கரிச்சுரங்கத்தைப் பற்றியதாகும்.

நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளிகள் வீடுகளில் உள்ள படுக்கைகள் எப்போதும் விரித்த வண்ணமாகவே இருக்கும். ஏனெனில் சுரங்கத்தொழில் 24 மணி நேரமும் நடந்துகொண்டே இருக்கும். அதை மூன்று கூருக்கி ஒவ்வொரு பகுதியையும் 8 மணி நேர வேலையாகப் பிரித்துக் காலை 7 மணி முதல் மாலை 3 மணி வரை ஒரு பிரிவினரும், மாலை 3 மணி முதல் இரவு 11 மணி வரை ஒரு பிரிவினரும், இரவு 11 மணி முதல் காலை

மணிவரை ஒரு பிரிவினருமாக வேலை செய்து கொண்டே இருப்பார்கள். ஆகவே இந்த மூன்று பிரிவினர் இரவுபகலாக மாறி மாறி வேலைசெய்து கொண்டே இருந்தனர். ஆதலால் காலை 7 மணிக்கு வேலைக்குப் போனவன் மாலை 3 மணிக்கு வெளியே வந்ததும், மாலை 3 மணிக்கு வேலைக்குப் போனவனுடைய படுக்கையில் படுத்துக்கொள்வான். மாலை 3 மணிக்கு வேலைக்குப் போனவன் இரவு 11 மணிக்கு வெளியே வந்ததும், இரவு 11 மணிக்கு வேலைக்குப் போகின்றவனுடைய படுக்கையில் படுத்துக்கொள்வான். இரவு 11 மணிக்கு வேலைக்குப் போனவன் காலை 7 மணிக்கு வெளியே வந்ததும், காலை 7 மணிக்கு வேலைக்குப் போனவனுடைய படுக்கையில் படுத்துக்கொள்வான்.

இப்படி எந்த நேரமும் படுக்கையைச் சுருட்டாமல் இருப்பதால் ஈரம் படிந்து பல நோய்களுக்குக் காரணமாகி ஈளையும், இருமலும், காசநோயும் பல தொத்து நோய்களும் பரவிப் பலர் மடிவார்கள். ஒரு சிறிய வீட்டில் பல குடும்பங்கள் குடியிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருந்ததால் உண்மையான குடும்பசுகத்தை யாரும் அடைய முடியாதபடி தடைசெய்யப்பட்டிருந்தது. மேலும் அந்தத் தொழிலாளர்களுக்கு வசிப்பதற்காகக் கொடுக்கப்பட்டிருந்த இடம் ஊரின் கழிவு நீரெல்லாம் ஒன்றாகச் சேரும் மிக மோசமான இடத்திலே இருந்தது. நோய் ஒருபக்கம், வறுமை ஒருபக்கம் வாட்டி வதைத்துத் தொழிலாளர்கள் வெறும் எலும்புக் கூடுகளாய், நடைப்பிணங்களாய்க் காட்சியளித்தார்கள்.

சுரங்கத்தில் வேலைசெய்துகொண்டிருந்து ஐந்தாண்டுகளுக்கு முன்பே வேலையிலிருந்து நீங்கிவிட்ட ஒரு தொழிலாளி இருமி இருமிக் கோழையைத் துப்பிக்

கொண்டிருக்கின்றுன். இதைப் பக்கத்திலிருந்து கவனித்தெ துக் டிருக்கின்றுன் ஜோலா.

ஜோ : ஏன் இப்படி இருமுகிருய்?

தொழி ளி: ஒன்றுமில்லே. இதுவரை நான் சேமித்து வை இருந்த சொத்து இது.

ஜோலா : இரத்தமா வருகிறது?

தொழிலாளி : இல்லே. நிலக்கரித்தூள் கோழையோடு கலந்து வருகிறது.

ஜோலா : இப்போதுதான் வேலேயிலிருந்து வந்தாயா?

தொழிலாளி : இல்லே. நான் வேலேயைவிட்டு ஐந் தாண்டுகளாய் விட்டன.

ஜோலா : ஐந்தாண்டுகளுக்குமுன் உன் உடலில்புகுந்த தூளா இன்னும் அப்படியே இருக்கின்றது?

தொழிலாளி : அது நான் சாகின்றவரையிலும் இருக் கும்.

ஜோலா : எவ்வளவு பணம் சேமித்து வைத்திருக் கின்ருய்?

தொழிலாளி : உம். உம். நிறைய சேர்த்து வைத்திருக் கின்றேன், இப்போது கக்கினேனே அந்தக் கரித் தூளே.

ஜோலா : விளேயாட்டாகப் பேசாதே. உண்மையைச் சொல்.

தொழிலாளி: விளையாட்டாக அல்ல, வேதனையோடு சொல்லுகின்றேன். நான் இறந்துவிட்டால் என்னைக் கட்டைகளைப் போட்டுக் கொளுத்தவேண்டிய அவசியமில்லை. தீ மாத்திரம் வைத்தால் போதும். குபீரென்று பற்றிக்கொள்ளும் என் உடல். ஏனென்றால் என்னைச் சுட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கும் அளவுக்கு என் உடலிலே இந்தப் பாழாய்ப்போன நிலக்கரித்தூள் இருக்கிறது. இதைத்தான் சேர்த்து வைத்திருக்கின்றேன்.

ஜோலா: உனக்கு எவ்வளவு கூலி கொடுத்துக் கொண்டிருந்தார்கள்?

தொழிலாளி: 8 மணி நேரத்திற்கு ஒரு பிரான்க் (0—14—0). குடிக்காமல் எங்களால் அந்தக் கஷ்டமான வேலையைச் செய்யமுடிவதில்லை. அதற்குப் பாதிக்குமேல் பணம் போய்விடும். மிகுதியை வைத்துக் கொண்டுதான் வாழவேண்டும். பெண்களை வேலைக்கு அனுப்பலாம் என்றாலோ பிரெஞ்சு நாட்டில் பெண்களை அதிகமாக வேட்டையாடுகின்றார்கள். அதோ போகின்றார்களே, அவர்கள் யாரென்று சொல்லுங்கள்?

ஜோலா: தொழிலாளிகள்! ஏன் இவ்வளவு சோர்ந்து நடந்துகொண்டிருக்கின்றார்கள்?

தொழிலாளி: சோர்ந்து நடக்கவில்லை. மெதுவாக நடக்கின்றார்கள். பெண்கள் அல்லவா? அதனை

ஜோலா: ஆ! என்ன? பெண்களா? ஏன் ஆண் உடையில் இருக்கின்றார்கள்? அப்படி ஒரு சட்டம் என்ன?

தொழிலாளி: இல்லை. இல்லை. ஆண்களால் ஆபத்து தொ வராமலிருக்க.

ஜோலா: அவ்வளவு பெரிய ஆபத்து என்ன?

தொழிலாளி: துப்பாக்கி எடுத்துக்கொண்டு காட்டுக்குப்போய்க் கொடிய விலங்கினங்களை வேட்டையாடுவதற்குப் பதிலாக இரண்டு ரொட்டிகளோடு இரண்டு மூன்று ப்ராங்குகளை எடுத்துக்கொண்டு பெண்களை வேட்டையாட இங்கே வந்து விடுகின்றார்கள். பெண்களும் தம் ஏழ்மையால் அந்த மைனர்களின் வலையில் விழுந்துவிடுகின்றார்கள். அதைச் செய்கிறேன், இதைச் செய்கிறேன் என்று ஆசை காட்டுகின்றார்கள். அன்றாடம் ரொட்டிக்கே அவதிப்படும் அபலைகள் என்ன செய்ய முடியும்? பசியால் சதா அழுதுகொண்டே இருக்கும் குழந்தைகள் வேறு. குடிகாரக் கணவன். அவளுக்கோ கஷ்டப்பட்டுச் சம்பாதிக்க முடியாத பலஹீனம். அப்படியே வேலைசெய்ய முன்வந்தாலும், வேலையோ திரந்தரமானதென்று நினைப்பதற்கில்லை. மேல் அதிகாரியின் இஷ்டத்துக்கு இணங்காவிட்டால் கிடைத்த வேலைக்கும் ஆபத்து. ஒழுக்கமாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்களுக்கு உணவில்லை. உணவு தேவையென்று நினைத்தால் ஒழுக்கத்துக்கு விடைகொடுத்து அனுப்பிவிட வேண்டும். இந்தக் கடினக் கயிற்றிலே தொங்கிக் கொண்டிருக்கிறார்கள் பல பெண்கள். இவ்வளவு கொடுமைகளையும் சகித்துக்கொண்டு பாவத்தின் பிம்பங்களாக, உயிர் நிழல்களாக நடமாடிக்கொண்டிருக்கின்றோம்' என்று புலம்புகிறான் தொழிலாளி.

ஜோலா: சரி. இதுதவிர வேறு ஏதாவது ஆபத்துண்டா?

தொழிலாளி: மேலே இருந்தால் இந்த ஆபத்து. சுரங்கத்துக்குள்ளே சென்றால் ஒவ்வொரு விநாடியும் ஆபத்துத்தான். சற்று நிதானமாகக் கேளுங்கள் சொல்லுகிறேன்.

மேலும் குறிப்பெடுக்க உட்காருகிறான் ஜோலா.

### சுரங்கத்தின் அபாயம்

வீட்டின் நான்கு பக்கங்களும் பழைய தகரத்தாலும் ஓட்டைவிழுந்த தடுக்குகளாலும், கிழிந்துபோன கந்தல், கோணிகளாலும் மூடப்பட்டிருக்கும். மேல் கூரைகள் இரவில் வானமண்டலத்தைப் பார்க்குமளவுக்குத் திறந்தபடியிருக்கும். சுமார் 20, அல்லது 25 அடி சுற்றளவுள்ளதாக, ஒரே அறைதான் இருக்கும். அதிலேதான் சமையல். பாய்தலையணை, குழந்தைகள் சுண்டெலிகளைப் பிடிக்க இப்படியும் அப்படியும் தாவிக்கொண்டிருக்கும் நாய்க்குட்டி. அதோடு சதா போர் நடத்திக் கொண்டிருக்கும் கோழிக் குஞ்சுகள், அவை அந்த அறையைச் சுற்றிக் கழியும் மலம், ஒருபக்கம் அம்மி, ஆட்டுக்கல், விறகு, விராட்டி, மரத்தூள் ஆகிய இவையெல்லாம் அந்த அறையை அலங்கரித்துக் கொண்டிருக்கும். பெருவாரியாக அந்த வீடுகள் ஈரம் நிறைந்த சதுப்பு நிலங்களிலேயே கட்டப் பட்டிருக்கும். இதில் குடியிருப்பது கணவன், மனைவி மாத்திரமல்ல. நோயால் பீடிக்கப்பட்ட தாய், துண்டு சுருட்டைப் பிடித்து இருமி இருமித் துப்பிக்கொண்டிருக்கும் தகப்பன், வந்த விருந்தினர் ஆகிய அவ்வளவுபேரும் அந்தச் சிறிய அறையிலே அடங்கிக் கிடக்கவேண்டும். பெண்கள் குளிப்பதற்கென்று தனியான இடம் இருக்காது. அவர்கள் வெட்ட வெளியில் வெட்கத்தை விட்

டுக குளிக்கவேண்டும். இந்த அடுக்குக் கட்டிங்கில்தான் தூங்கிக்கொண்டிருப்பான் தொழிலாளி.

காலை 5 மணிக்குச் சங்கு பிடிக்கும். சங்கோசையை அன்றுடம் கேட்ட பழக்கத்தால் விழித்துப் பார்த்து, எழுந்திருக்க முடியாமல் கைகால்கள் வலியோடு மறுபடி யும் புரண்டு படுத்துக்கொள்வான் தொழிலாளி. மனைவி சலித்துக்கொண்டு முணுமுணுத்துப் பலமுறை தட்டி எழுப்புவாள். தொல்லை பொறுக்கமாட்டாமல் எழுந் திருப்பான் அவனும். இதற்குள் மணி ஆறு அடிக்கும். மறுமுறை ஒரு சங்கோசை கேட்கும். நேரமாய்விட்டதே என்று விரைவாக எழுந்து காலைக்கடன்களை அறைகுறை யாக முடித்துக்கொண்டு தயாராகப் போட்டுவைத்திருக் கும் சாப்பாட்டு ஏனத்தை எடுத்துக்கொண்டு தொழிற் சாலையை நோக்கி ஓடுவான். அதிகாரியிடம் தன் பெய ரைப் பதிவு செய்துவிட்டுச் சுரங்கத்தின் உள்ளேசெல்வ தற்காக அமைக்கப்பட்டிருக்கும் கேஜ்ஜில் நுழைவான். அதன் மேல்தட்டில் 60 பேரும், கீழ்த்தட்டில் 60 பேரும் நிற்கலாம். தொழிலாளிகள் அனைவரும் அதில் ஏறியவுடனே வெளியே இருக்கும் மற்றோர் தொழிலாளி அதன் கதவுகளை மூடிப் பக்கத்திலே இருக்கும் மின்சாரப் பித்தானை இரண்டுதரம் அழுத்துவான். அது யந்திர அறையில் இருக்கும் டிரைவருக்குப் பக்கத்தில் அமைக் கப்பட்டிருக்கும் மணிப்பொறியில் இரண்டு மணி அடிக் கச்செய்யும். அதன் அறிகுறி கேஜ்ஜைக் கீழே இறக்க லாம் என்பதுதான். அந்தக் கேஜ் ஒரேயடியாக வேக மாகக் கீழே ஓடாமல் முதன் முதலில் மெதுவாக இறங் கும்படி இறக்குவார் டிரைவர். ஏனெனில் வேகமாக ஓ டினல் அதனுள்ளிருக்கும் தொழிலாளிகள் நரம்புக ளெல்லாம் ஒன்றுதிரண்டு தலையை நோக்கி ஓடிவருவ தைப் போல இருக்கும். அதனல் இவருக்கு வாந்தியும்.

தலைவலியும் வரும். ஆகவே முதலில் மெதுவாகச் செலுத்துவார் டிரைவர். அது போய்ச் சேரவேண்டிய இடம் ஏழாயிரம் அடிகள். நிலத்தின் கனத்தை 700 அடிகள் விட்டுவிட்டு அதன்கீழே 300 அடிக்கு ஒரு நிலையம் இருக்கும். அங்கெல்லாம் தொழிலாளிகள் இறங்குவார்கள். அது பல்வேறு பகுதிகளுக்குப் போக வேண்டிய தொழிலாளிகளைப் பல நிலையங்களிலே இறக்கிவிடும். ரயில்வே நிலையத்தை ஸ்டேஷன் என்று சொல்வதைப் போல அதைப் பிளேட் (Plate) என்றழைக்கின்றார்கள். இப்படி ஒருகேஜ் அடித்தளத்துக்குப் போய்ச்சேருவதற்குள் 10,12 இடங்களில் நின்று நின்று செல்லும். அப்படித் தொழிலாளிகளை ஏற்றிக்கொண்டு கீழே இறங்கும்போது அவர்கள் தங்கள் தங்கள் இஷ்ட தேவதைகளைக் கும்பிட்டுக்கொள்வது நமக்கே மனக் குழப்பத்தைக் கொடுத்துவிடும்.

ஏனெனில் சுரங்கத்தில் செல்லும் தொழிலாளி ஒவ்வொரு நாளும் செத்துச் செத்துப் பிழைக்கின்றான். ஒவ்வொரு விநாடியும் அவ்வளவு அபாயம் நிறைந்தது. உள்ளே சென்றவன் மீண்டும் உயிரோடு வெளியே வருவானா என்பது சந்தேகந்தான். உள்ளே சென்றுவிட்டால் பனியா, மழையா, காற்றா, இரவா, பகலா ஒன்றுமே தெரியாது. ஒரே இருட்டுமயம். ஒவ்வொருவரும் கண்டிப்பாகக் கையில் விளக்கை வைத்துக் கொண்டிருக்க வேண்டும். உள்ளே பாறைகள். அதை யந்திரத்தின் உதவியால் உடைக்கவேண்டும். தண்ணீர் பல இடங்களில் ஊற்றுப்பெருக்கெடுத்து ஓடும். அந்தத் தண்ணீரை எல்லாம் மேலே அனுப்பிவிடவேண்டும். மேலே இருந்து குடி தண்ணீரையும், சுவாசிக்கக் காற்றையும் உள்ளே கொண்டுசெல்ல வேண்டும். இந்த இரண்டும் 7000 அடிகள் கீழே வருவதற்குள் சுடுதண்ணீரா

கவும், வெப்பக்காற்ருகவும் மாறிவிடும். அந்தக் காற்றைச் சுவாசித்து, அந்த வெந்நீரைத்தான் குடிக்கவேண்டும். மேலே இருக்கும்போது பனியால் ஆடைகள் நனைந்துவிடும். உள்ளே சென்ருல் வியர்வையால் ஆடைகள் நனைந்துவிடும். காற்று முதலில் அந்தக் கற்பாறையில் ஒரு சிறிய வெடிப்பை உண்டாக்கும். அது நாளாக நாளாக அந்த மலையையே தூக்கி மற்ருேர் மலையில் மோதி வெடிக்கும். அந்த இடுக்கில் வேலைசெய்து கொண்டிருக்கும் தொழிலாளிகள் அவ்வளவுபேரும் மடிவார்கள். அந்த வெடிசத்தம் ஏற்படுகிறபோது பூமியின் அதிர்ச்சியால் இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் இருக்கும் கடைகளில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் சோடா புட்டிகள் கீழே உருண்டு, அந்தக் கடைக்காரனும் குப்புறக் கீழே விழுவான். இந்தப் பயங்கரமான ஆபத்தைத்தான் **ஏர் பிளாஸ்ட்** (Air blast) என்கிருர்கள். தீப்பிடித்துக்கொள்வதினுல் வேறு அபாயம் ஏற்படும். கேஜ்கீழே வேகமாகப்போகும்போது அதைத் தாங்கியிருக்கும் இரும்புவடங்கள் அறுந்து கேஜ் 7000 அடிகளுக்குக் கீழேவிழுந்து நொறுங்கிச் சப்பையாய், அதனுள் இருக்கும் தொழிலாளிகள் அப்பளமாய் விடுவார்கள். இதைப் போன்ற அபாயங்கள் ஏற்படுகிற போது தொழிலாளிகள் அனைவரும் அந்தக் கேஜின் மூலந்தான் மேலே வர வேண்டும். இல்லையானுல் இரண்டோர் இடங்களில் ஏணிகளை வைத்திருப்பார்கள். அபாய காலங்களில் 7000 அடி ஏணியிலேயே வந்து உயிர்தப்ப முடியுமா? அதுவும் சாத்தியமற்றதாகிவிடும். இப்படி இறந்துவிட்டவர்களைச் சீக்கிரமாக அடையாளங் கண்டுகொள்ள முடியாது. ஏனெனில் கை வேறு கால் வேருக உடல் சின்னபின்னப்பட்டிருக்கும். இப்படி அபாயங்கள் நேர்ந்துவிட்டால் தொழிற்சாலையில் நீண்ட சங்கைப் பிடிப்பார்

கள். அதன் ஓசையைக் கேட்டமாத்திரத்தில் சுமார் ஐயாயிரம், ஆருயிரம்பெண்கள் அலறியடித்துக்கொண்டு சுரங்க மேட்டிலே வந்து சேர்ந்து விடுவார்கள். ஏனென்ருல் அவர்களத்தனைபேருக்கும் வேண்டியவர்கள் உள்ளே சென்றிருக்கின்ருர்கள். யார் இறந்தார்கள் என்று அப்போது திட்டமாகத் தெரியாது. ஆகவே இறந்துவிட்டவன் பிரேத அடையாளத்தைக் கண்டு பிடித்து, இறந்தவன் இன்னுன்தான் என்று திட்டமாக அதிகாரிகள் அறிவிக்கும் வரையில், மகனை அனுப்பிய தாய், தந்தையை அனுப்பிய சேய், கணவனை அனுப்பிய மனைவி, அண்ணனை அனுப்பிய தம்பி, தம்பியை அனுப்பிய அண்ணன் ஆகிய அவ்வளவு பேரும் பெருங் குரல் வைத்து அழுது கொண்டிருப்பார்கள். அதிகாரி ஆறுதல் சொல்லிப் பிறகு அதட்டியும் பார்ப்பான். அவன் ஆறுதலுக்கும், அதட்டலுக்குமா நிற்கும் இந்த அழுகை?

கொஞ்ச நேரத்தில் உள்ளே இருந்து கொண்டுவருவார்கள் உள்ளே துண்டுதுண்டாகச் சிதறிப்போன உடலின் உறுப்புகளை ஒரு கோணியில் கட்டி. உடைகளால் கண்டுபிடிக்க முடியாது, எல்லாருக்கும் ஒரே விதச் சட்டை. ஆகையால் அவன் உடலில் இருக்கும் மச்சம், தலைமுடி, முகத்தின் ஒருபக்கம், விரலில் ஏதாவது சங்குமோதிரம் போட்டுக் கொண்டிருந்தால் அதைப் பார்த்து, இப்படிக் கஷ்டப்பட்டு-இறந்துவிட்டவன் இன்னுனென்று அறிவிப்பார்கள் அதிகாரிகள். அதன் பிறகுதான் இறந்துவிட்டவன் குடும்பத்தார் நீங்கலாக மற்றவர்கள் அழுவதை நிறுத்துவார்கள். அதுவரை கனிமேடு ஒரே பெண்கள் மயமாயிருக்கும். இப்படி ஒவ்வொரு நாளும் உயிருக்காகப் போராடுகிற தொழிலாளிக்கு 8 மணிநேர வேலைக்குக் கூலி எட்டணு முதல் பதினுன்கு அணு வரை. இதை எல்லாம் விடா

மல் குறிப்பெடுத்தான் ஜோலா. இந்த உண்மை நிறைந்த சோக வரலாற்றைத் தழுவியதுதான் அவன் எழுதிய "ஜெர்மினல்" என்ற நூல்.

## அரசியல் நிலைமை

அன்றைய பிரான்ஸ் நாட்டின் அரசியல் நிலைமை பலப்பல கட்சிகள் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

இறுதியில் குடியரசுக் கட்சியைத் தோற்றுவிக்க மப்பாட் என்ற ஒரு பெரிய பேச்சாளன் தோன்று கிறான். குடியரசுவாதிகளைத் தன் பேச்சின் வன்மை யால் ஒன்றாகத் திரட்டுகிறான். ஆனால் சோஷலிஸ்டு கட்சி ஆட்சிக்கு வந்துவிடுகிறது. அதன் காரணமாக இரண்டாயிரம் குடியரசுவாதிகள் கைது செய்யப்படு கின்றார்கள். மறுபடியும் ஒரு சமாதானமான நிலை ஏற் படுகிறது. இந்தப் போராட்டத்துக்கிடையே யூத எதிர்ப்பு எண்ணம் தலைதூக்கி நின்றது. இதற்குச் சாதகமாக நாட்டின் பொறுப்பு வாய்ந்த உத்தியோகங் களில் யூதர்கள் நிரம்பியிருக்கின்றார்கள். இந்த ஒரு சூழ்நிலையைப் பயன் படுத்திக்கொண்டு, இவர்களைத் தொலைக்கவேண்டும் என்ற எண்ணம் ஒரு சில செல் வாக்குப்பெற்றவர்களின் முடிவாக உருவெடுக்கிறது. அன்றிருந்த நிலையில் யூதர்களை எதிர்ப்பதென்பது அவ்வளவு லேசான காரியமல்ல.

ஏனெனில் கலகத்தை அடக்கவும், எதிரி நாடு களின் மீது படையெடுக்கவும், மாற்றாரின் படை யெடுப்பைத் தடுக்கவும் அமைக்கப்பட்டிருந்த சக்தி வாய்ந்த இராணுவத்தில் யூதர்கள் மிகப் பலராக அது

வும் பொறுப்பான வேலைகளில் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் மனம்வைத்தால் நாட்டையே மண்மேடாக்க முடியும். நாட்டைப் பிறருக்குக் காட்டிக்கொடுத்துவிட முடியும். இராணுவத்தைப் பாழாக்கி மருந்துக்கிடங்கில் தீவைத்து நாட்டைப் பாதுகாப்பற்றப் பராரி நிலைக்கு கொண்டுவந்துவிட முடியும். எதிரிகள் படையெடுக்கும்போது ஒன்றும் செய்யாமலிருந்துவிட முடியும். ஆயுதசாலைகளைத் திறந்து விட்டு விட்டு இவர்களும் அவர்களோடு சேர்ந்துகொள்ள முடியும். இவ்வளவு சக்திவாய்ந்தவர்களாக இருக்கும் இந்த யூதர்களை அவசரப்பட்டு எதிர்த்து அபாயத்தில் அகப்பட்டுக்கொள்ளக் கூடாது. நாகரிகமான சதி செய்துவிடவேண்டும். அந்தச் சதியும் நாசூக்கானதாக, நாகரிகமானதாக நம்பத் தகுந்ததாக, ' நாட்டுக்கே பெருங் கேடு விளைந்துவிட்டது, நாட்டாரே! ஒன்றுபடுங்கள் என்று அழைப்பதாக இருக்க வேண்டும். நீதிமன்றம் ஏறியதாக இருக்க வேண்டும். நீதிபதிகள் கொடுக்கும் தீர்ப்பாக இருக்க வேண்டும். இதில் நாம் அகப்பட்டுக்கொள்ளக்கூடாது என்றெல்லாம் சிலர் சதிசெய்து பல நாட்கள் சிந்தித்துக் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

போர் நடந்துகொண்டிருக்கின்ற இந்த நேரந்தான் சரியான நேரம். இதை விட்டால் டிரைபஸின் மேல் பழிசுமத்துவதற்கு வேறு நல்ல தருணம் கிடைக்காது. மேலும் போர்க் காலத்தில், குற்றச்சாட்டு, விசாரணை, தீர்ப்பு, தண்டனை எல்லாம் மின்னல் வேகத்தில் முடிந்துவிடும். வழக்கைச் சீர்தூக்கிப் பார்க்கத்தக்க ஆதாரங்களைத் திரட்டுவதற்காகப் பல நாட்கள் தவணை கொடுக்கமாட்டார்கள். அதுவும் நாம் செய்யப்போகும் சதிவேலை போருக்குச் சம்பந்தப்பட்டதாயிருந்தால் நாட்டின் பொது உயர்தர நீதிமன்றம் விசாரிக்கப்

போவதில்லை. இராணுவ நீதிமன்றந்தான் விசாரிக்கும். உடனே தீர்ப்பளிப்பது தவிர ஒத்திப்போடும் பழக்கம் இராணுவ நீதிமன்றத்துக்கிருக்காது.

ஆகவே பிரான்சு நாட்டின் யுத்தரகசியத்தை ஜெர்மன் இராணுவ முகாமுக்கு அனுப்பிவிட்டு, அந்தப் பழியை டிரைபஸின்மேல் போட்டு விடுவதென்று தீர் மானித்தார்கள். இந்தக் குறியிலிருந்து டிரைபஸ் தப்பவே முடியாது. ஆனால் பயங்கரமான வேலை. சதிப் பகிரங்கப்படுத்தப்பட்டால் தலைக்கே ஆபத்து. யார் வேலைகெட்டு இந்தச் சூழ்ச்சியைக் கண்டுபிடிக்க முன் வரப் போகின்றார்கள்? பார்ப்போம் ஒருகை. ஆனால் இந்த வேலையை ஒரு சாதாரண மனிதனோ, அல்லது படையில் வேலைபார்க்க வாய்ப்பில்லாதவனோ செய்து விட முடியாது. இரும்பை இரும்பாலடித்து வளைப் பதைப்போல ஒரு இராணுவத் தலைவனை வேறோர் இராணுவத் தலைவனைக்கொண்டே கெடுத்துவிட வேண்டும். இவ்வளவும் செய்யத்துணிவு கொண்ட இராணுவச் செல்வாக்குடையவன் யார்? அவன்தான் யுத்த எதிர்ப்பு இயக்கத்தின் முன்னோடியும், இராணுவ தளகர்த்தனும், பல சூழ்ச்சிக்காரச் செல்வர்களின் கைப் பாவையும், டிரைபஸின் எதிரிகளுடைய சூத்திரக் கயிறு மான எஸ்டரெஸி.

இவனைவிட அவ்வளவு வல்லமை பொருந்தியவர் கள் வேறுயாரும் இல்லை. அன்று, டிரைபஸை எதிர்ப் பது உலகத்தையே எதிர்ப்பதாகும். எனினும் செய்து தீரவேண்டிய வேலை. இல்லையானால் யூதச்செல்வாக்கு வளரும். கரையான் புற்றெடுக்கக் கரும்பாம்பு குடி புகுந்த கதையாக முடியும். பிறகு பிரெஞ்சு நாடு பிரெஞ்சுக்காரர்களுக்கல்ல. பிழைக்க வந்த யூதர்களுக்

காகிவிடும். இப்போதே இராணுவத்தின் தலைமை ஸ்தானங்களைப் பிடித்திருக்கின்றார்கள். இனி அவர்கள் சிங்காதனத்தையும், செங்கோலையும் பிடிக்கவேண்டியது தான் மிகுதி. ஆகவே வளர விடக்கூடாது. எவ்வளவு பணம் செலவானாலும் சரி. யூதஇனத்தை ஒழிக்க எல்லாரும் பணஉதவிசெய்ய முன்வர வேண்டும். இன்று பணத்தின் அருமையை அவர்கள் எண்ணினால் நாளை அவர்களுடைய பின்சந்ததிகள் நடைப்பிணமாய் விடுவார்கள். பிரான்சு நாடு என்று ஒன்று இருந்ததா, என்று கற்பனை இலக்கியத்திலகூடக் காணமுடியாமல் போய்விடும், என்று இப்படி எல்லாம் சொல்லிப் பயங்காட்டிப் பணத்தைச் சேகரித்து வைத்துக்கொண்டு சதி வேலையைத் தொடங்கினார்கள். எஸ்டரெஸியை அழைத்தார்கள். ஏதோ ஒரு தொகையைக் கையில் கொடுத்து விஷய விளக்கத்தை ஆரம்பித்தார்கள். எவ்வளவு திடமனதுடையவனாயிருந்தாலும் செய்யப் போகும் காரியம் மகாக்கொடியதும், துரோகமானதுமான செயல் என்றெண்ணுகிறபோது அவனையுமறியாமல் கை கால்கள் நடுக்கந்தான் கொடுக்கும். அதே நிலையை யடைந்தான் எஸ்டரெஸி. முதலில் சோகம், பிறகு சோர்வு, இறுதியில் உறுதி, இப்படிப் படிப்படியாக மாறியது அவன் அகம். ஆம்என்று சொல்லிற்று அவன் முகம். துணிந்து தீயில் குதிக்கக் கிளம்பிவிட்டான். கெடுமதி அப்போது அவன் கண்களுக்குத் தெரியவில்லை. எதுவரினும் வரட்டும். எப்படியும் யூதர்களை ஒழித்து, யூத எதிர்ப்பு இயக்கத்தை வளர்த்தே தீரவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டான்.

### சதி புறப்பட்டுவிட்டது.

எஸ்டரெஸி இந்த நாச வேலைக்காக வாங்கிய லஞ்சத் தொகை ஆயிரம் பிராங்குகள். இந்தச் சிறிய தொகைக்

காக நாட்டையே காட்டிக் கொடுக்கப்போகின்றான். ஆனால் அந்த உண்மை அவனுக்குப் புலப்படவில்லை. டிரைபஸையும் யூதர்களையும் ஒழிப்பதாக அவன் எண்ணம், வீட்டிலுள்ள கொசுக்களை விரட்டுவதற்காக வீட்டிற்கே தீ வைத்ததைப் போன்ற செய்கை என்று அவன் எண்ணவில்லை. ஒரு பக்கம் ஆயிரம் பிராங்குகள். மற்றோர் பக்கம் டிரைபஸ். வேறோர் பக்கம் யூதர்கள். இவர்கள் தான் அவன் கண்ணுக்குத் தெரிகின்றார்களே யன்றி, இவ்வளவுக்கும் மேலாக நாடே அந்தச் சதிப் புயலில் அகப்பட்டுக்கொள்ளுமே என்ற எண்ணம் அவன் மனதில் தோன்றவே இல்லை. 'ஒழிந்தான் டிரைபஸ்' என்ற ஓசை ஒன்றுதான் கேட்கிறது. "ஒழிந்தது நாடு," என்ற ஓசை கேட்கவில்லை. ரகசியக் கடிதம் தயாராய்விட்டது.

அதில் ஜெர்மன் பட்டாளத்தைத் தாக்குவதற்கான திட்டங்கள், படையை நடத்துவதில் ஏற்பட்ட புதிய முறைகள், பீரங்கிப்படையில் செய்யப்பட்டமாற்றங்கள், மடகாஸ் கரைப்பற்றிய யுத்தக் குறிப்புகள், ஆக இந்த மூன்று அருமையான ரகசியங்களையும் எழுதி இதை ஒரு நகல் எடுத்துக்கொண்டு அசலைத் திருப்பிவிடுங்கள். என்று குறிப்பெழுதி, அதை ஜெர்மன் தூதுவன் மன்ஸ்டர் (Munster) என்பவனுக்கும், இதாலிய அதிகாரியான ஷெவாலெஸ் கோப்பன் (Schewalez Koppen) என்பவனுக்கும் அனுப்பிவைத்துவிட்டான்.

15-7-1894-ல் இந்த ராணுவ ரகசியம் மேற்கண்டவர்கள் மூலம் ஜெர்மன் இராணுவ இலாகாவுக்கு போய்ச் சேர்ந்துவிட்டது.

### கலகத் தொடக்கம்

ஜெர்மன் இராணுவ முகாமில் இந்த ரகசியக் கடிதத்தைப் போட்டுவிட்டு என்ன நடக்கின்றதென்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள்.

பிரான்சு நாட்டு ஒற்றர்கள் சந்தேகப்படும்படியான சிலசம்பவங்களை நடத்திக்காட்டுகின்றார்கள். இதில் ஜெர்மானியர்களுக்கு இவ்வளவு கவலை பிறந்ததற்குக் காரணம் என்னவென்றால், அங்கேயும் பலபொறுப்புள்ள உத்தியோகங்களிலும், நிதி இலாக்கா, வியாபாரம் முதலான எல்லாவற்றிலும் யூதர்களே அதிகமாக இருந்ததால், இந்த யூத எதிர்ப்பு இயக்கத்துக்கு ஆக்கங் கொடுக்கும் வகையில் அவர்களாலான எல்லாஉதவியும் செய்ய முன்வந்தார்கள்.

அதில் முதன்மையானதும், முக்கியமானதும் தான் இந்த ரகசியக்கடிதத்தின் சதி. மேலும் எஸ்டரேஸி தன் மட்டத்தனத்தால் செய்த சதி, யூதர்களை ஒழிக்கமட்டுமா பயன்படும்? பிரான்சு நாட்டையே கைப்பற்ற உதவுமே! இந்த இருவித வசதிகளை எண்ணி ஜெர்மன் இராணுவத் தலைவர்கள் இந்தச்சதிக்கு உடந்தையாயிருந்ததில் எதுவும் ஆச்சரியமில்லை.

ஏதோ ரகசியங்கள் இருபட்டாளங்களுக்கும் நடைபெறுகின்றன என்று அறிந்த ஒற்றர்கள் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கின்றார்கள். எனினும் அவர்களால் ஆதாரங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எஸ்டரேஸி அனுப்பிய கடிதம் திரும்பி வருமென்று எதிர்பார்த்தான். ஆனால் அது இவன் கைக்குத் திரும்பிவரவில்லை. ஏனெனில், அந்தக்கடிதத்தின் நகல் ஒன்றை எழுதிக் கொண்டு அதைத் துண்டுதுண்டாகக் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டுவிடுகின்றார்கள். சென்ற கடிதம் திரும்பிவராமல் போகவே எஸ்டரேஸி மிகப்பயந்து போகிறான். என்றாலும் இராணுவ நீதி மன்றத்தின் தலைவர், யுத்த மந்திரி, ஆகியோரெல்லாம் தன்கட்சியைச் சேர்ந்தவர்களென்ற ஆறுதலோடு தைரியமாக இருக்கின்றான்.

எஸ்டரெஸி தன்கூலியாட்கள் மூலம் பிரெஞ்சு இராணுவ இரகசியங்கள் வெளியாகின்றன என்ற வதந்தியைச் சிறுகச் சிறுகக் கிளப்பிவிட்டான்.

திடீரென ஒரு நாள் பிரெஞ்சு இராணுவ முகாமுக்கு ஜெர்மன் இராணுவ முகாமில் வேவுபார்க்கும் ஒற்றரால் தந்தி ஒன்று வருகிறது. அதில் பிரெஞ்சு இராணுவத்தின் இன்றியமையாத ரகசியங்கள் மூன்று வெளியாய்விட்டதாக நம்பத்தகுந்த செய்தி கிடைத்திருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தச் செய்தி இராணுவ முகாமிலிருந்து குடியரசுத்தலைவருக்குக் கிடைக்கிறது. எப்படி இந்த ரகசியங்கள் வெளியேறி இருக்கமுடியும்? யார் இதற்குப் பொறுப்பாளி? இராணுவத் தலைவன் டிரைபஸ் தவிர வேறுயார் இதை இவ்வளவு தைரியமாகச் செய்திருக்கமுடியும்? அவன் ஒரு யூதன். பனமா கம்பெனியில் நடந்த மோசடிவழக்குக்காகத் தண்டிக்கப்பட்ட மூன்றுயூதஅதிகாரிகளை விடுவிப்பதற்காக, பிரெஞ்சு பட்டாளத்தை ஜெர்மன் நாட்டுக்குக் காட்டிக்கொடுத்து, அதன்மூலம் போர் பலமாகநடந்தோ, அல்லது பிரெஞ்சு நாடே அழிந்தோ போய்விடுமானல் தன் இனத்தாரை விடுவித்துவிடலாம் என்று இந்த டிரைபஸ்தான் சதி செய்திருக்கின்முன். இன்னும் இவனை வெளியேவிட்டு வைத்தால் அபாயம் அதிகரித்து நாடு அழிவது திண்ணம் எனத் தூபம்போடுகின்றனர்.

ஒரு உயர்தர இராணுவத் தலைவனைத் தக்க ஆதாரங்கள் எதுவுமில்லாமல் கைது செய்வதென்பது சட்டங்கள் உடனே தலையாட்டக்கூடிய செய்தியல்ல. தான் யாரைக் கைதுசெய்ய உத்தேசம் கொண்டிருக்கிறதோ அந்த நபரைப்பற்றிய முன்பின் நடவடிக்கைகள், அவன் சேவையால் ஏற்பட்ட நன்மை, தீமைகள் அவ்வளவையும் பார்த்துத்தான் ஒருவனைக் கைது செய்யமுடியும். ஆகவே

ஆதாரங்கள் எங்கே? என்று குடியரசுத்தலைவர் கேட்கின்றார். இவன் பொய்க்கையெழுத்திட்டு அனுப்பிய கடிதங்கள் கிடைக்கவில்லை. இதிலிருந்து எடுத்தநகலும் கிடைக்கவில்லை. ஜெர்மன் இராணுவமுகாமிலிருக்கும் ஒற்றர்கள்வசம் கிடைத்திருப்பதாகத் தகவல்கிடைத்திருக்கிறது. அது இங்கே வந்து சேரும்வரையில் டிரைபஸை வெளியே நடமாடவிட்டால் அபாயம் அதிகரிக்கும். ஒருசமயம் இவனுடைய ரகசிய முயற்சியால், பயமுறுத்தலால் அந்த அசல்கடிதங்கள் கிடைக்காமல்போனாலும் போகக்கூடும். ஆகவே இவனை உடனே கைதுசெய்யவேண்டுமென்று இராணுவ முகாம் விரும்புகிறது.

குடியரசுத்தலைவரும் தீரயோசிக்காமல் டிரைபஸைக் கைதுசெய்ய உத்தரவளித்துவிட்டார். காலை எழுந்து கடன்களை முடித்துக்கொண்டு 9 மணிக்கு உணவருந்திக் கொண்டிருக்கின்றான் டிரைபஸ் தன்மனைவியோடு சந்தோஷமாக. கைவிலங்கோடு வந்துநிற்கிறான் கர்னல் பட்டி இரண்டுஆட்களுடன். கர்னல்பட்டி! இதுஎன்ன கோலம்? என்கிறான் டிரைபஸ். "கோலமுமல்ல, காலமுமல்ல. உன்னைக் கைதுசெய்ய வந்திருக்கின்றேன்" என்றான் பாதகன். பயத்தால் நடுங்கினாள்மனைவி. பதறிப்போனான் டிரைபஸ். "உண்மையாகவா பட்டி?" என்று கேட்டான் டிரைபஸ். "இதோ உத்திரவு, நீட்டுக் கைகளை" என்றான் கர்னல். துப்பாக்கியும், வாளும் ஏந்திய கைகள், இன்று இரும்பு விலங்குகளால் கட்டப்படுகின்றன. காரணம் என்னவாம் கர்னல்? கைதுசெய்ய உத்தரவளித்தவர்களைக் கேட்கவேண்டும் என்று சுளித்தமுகத்தோடு சொன்னான் பட்டி. 'சரி' என நடந்தான். தன் மனைவிக்குச்சொல்லப் பின்னால் திரும்பினான். அவள் சோபாவில் கவிழ்ந்தவண்ணம் அழுதுகொண்டிருக்கின்றாள்.

டிரைபஸைக்கைதுசெய்துகொண்டு வருவதைக் கண்டு களிக்கவேண்டுமென்று ஆயிரக்கணக்கான, யூத எதிர்ப்பு இயக்கத்தார் வெளியே காத்துக்கொண்டிருக் கின்றனர். அவனை வெளியே கொண்டுவந்து காரில் ஏற்று வதற்குள் ஆயிரம் ஈட்டிகள் அவன் இருதயத்தில் பாய்ச்சுவதைப் போல் அவலவார்த்தைகளால் அர்ச்சித் தனர் அற்பர்கள். அவன் இராணுவத் தலைவனாக இருந்த போது எதிரில்வர பயந்தவர்களெல்லாம் இன்று எக்காள மிட்டு ஏளனம்செய்கின்றனர். காலத்தின் கொடுமை என்று கேட்டுச்சகித்துக்கொண்டான். அது தவிர அப் போது அவனால் ஒன்றும் செய்துவிட முடியாது என்ற தைரியத்தினால்தான் இந்த அசடுகள் இப்படிப்பேசு கின்றன. எனினும் தான் ஒரு தவறும் செய்திராதபோது ஏதோ சந்தேகப்பட்டுக்கொண்டு போகின்றார்கள். ஆகவே நிச்சயமாக இராணுவ நீதிமன்றத்தில் நீதி கிடைக்கும் என்று தைரியமாகச் செல்கின்றான். "நான் ஒரு குற்றமும் செய்யவில்லை, எனக்கு எவ்வித அபாய மும் இல்லை, ஆகவே தைரியமாக இரு" என்று தன்மனை விக்குக் கடைசியாக ஆறுதல் சொல்கின்றான். எனினும், இனி தன்கணவன் வாழ்க்கையில் உதயமே இல்லை என்று கதறுகிறாள். "எவ்வளவு மகோன்னத நிலையிலே இருந்தவன் டிரைபஸ்? இன்று மின்னல்வேகத்தில் கைதுசெய்துகொண்டு போகப்படுகின்றான் என்றால் ஒரு சாதாரணமான வழக்காயிருக்க முடியாது, ஏதோ ஒரு பெரிய மன்னிக்கமுடியாத குற்றத்தைச் செய்திருக்க வேண்டும், இல்லையானால் இந்த முடிவுக்குச் சர்க்கார் வந் திருக்கமுடியாது" என்று இப்படிப் பேசுகின்றனர்மக்கள்.

பாதுகாப்புச்சிறையிலே தள்ளிவிட்டு டிரைபஸின் வீட்டையும் சோதனையிடுகின்றான் பட்டி. அவன்

திர்பார்த்த எதுவுமே கிடைக்கவில்லை. ஏதோ கிடைத்து விட்டதாக முகமலர்ச்சியோடு வெளியே வருகின்றான். பாதுகாப்புச் சிறையிலே வைக்கப்பட்ட டிரைபஸை மிகக்கொடுமையாக நடத்துகின்றனர் அதிகாரிகள். எனினும் தனக்கு விடுதலையுண்டு என்று திடமாக நம்பி யிருந்தான் இந்த நிரபராதி டிரைபஸ். திடீரென ஒரு நாள் பாதுகாப்புச் சிறையில் நுழைந்தான் கர்னல்பட்டி. ஒரு பெருந்தாளை அவன் கையில்கொடுத்து எதையோ எழுதும்படி கட்டளையிடுகின்றான். டிரைபஸ் அவன் சொன்னவண்ணமே எழுதுகின்றான். இரண்டுவரிகள் எழுதி முடிப்பதற்குள், போதும் நிறுத்து, 'இதே கை யெழுத்துத்தான்', என்று தன்கையில் இருக்கும் தாளைப்பார்த்துக்கொள்ளுகின்றான். இந்த நாடகத் தின் மூலம் ஜெர்மன் இராணுவ முகாமில் அகப்பட்ட இரகசியக் கடிதங்கள் இவனுடைய கையெழுத்துத்தான் என்று அநியாயமாகப் பழிசுமத்திவிட்டான். இங்கே கர்னல்பட்டி என்ற பாதகனால் கேட்கப்பட்ட எந்தக் கேள்விக்கும் பதிலளிக்க மறுத்துவிட்டான் டிரைபஸ். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகுதான், தன்னைப்படுகுழியில் தள்ள ஏதோ ஒரு பெரிய சதி நடந்துகொண்டிருக் கின்றது என்பதை உணர்ந்தான் டிரைபஸ்.

பிறகு ஒருநாள் இதே சதிச்செயலை ஊர்ஜிதப் படுத்த மற்றோர்முறையைக் கையாண்டுபார்த்தான் கர்னல். அதாவது டிரைபஸ் சிறையில் தூங்கிக்கொண் டிருக்கும்போது இதே பட்டி அவன்முகத்தில் பளிச் பளிச் என்று விளக்கை அடித்தான். விழித்தெழுந்த டிரைபஸ் தன்னெதிரில் பட்டி நிற்பதைப் பார்த்து ஒன் றும் பேசாமல் மறுபடியும் படுத்துக்கொண்டான். பட்டி இப்படிச்செய்ததற்குக் காரணம் என்னவென் றால், தூக்கவெறியில் ஏதாவது உளறிவிட்டால் அதை

ஆதாரமாக வைத்துக்கொண்டு மேலும் இவன் குற்றத்தை உறுதியாக்கி விடலாம் என்ற எண்ணத்திலே தான். இவனோடு சேர்ந்துகொண்டு அந்தப்பாரிஸில் இருந்த சர்ச்மிடி என்ற சிறைச்சாலையின் அதிகாரி சொ லொணாத தொல்லைகளைத்தந்தான். இவ்வளவையும் சகித்துக்கொண்டு தன்பங்கில் நீதி கிடைக்குமென் உறுதியாக நம்பியிருந்தான்.

## மறுப்பு

மேத்யூ டிரைபஸ் தன் சகோதரனை ஜாமீனில் விட வேண்டுமென்று முதல் இராணுவ நீதிமன்றத்தாருக்கு மனுப்போட்டிருந்தான். கொடிய கொலைக்குற்றத்தைச் செய்த கொலைகாரனைக்கூட சிலவேளைகளில் ஜாமீனில் விடுகின்றார்கள். ஆனால் டிரைபஸை வெளியேவிட மறுத்தார்கள். ஏனெனில், இவனை வெளியே விட்டு விட்டால், எங்கே தாங்கள் செய்த குட்டுகளை எல்லாம் கண்டுபிடித்துவிடுவானோ என்று பயந்துவிட்டார்கள். இந்தவழக்கு இயற்கையாக நடந்திருந்தால், அதைத்தொடர்ந்து நடைபெற வேண்டிய அலுவல்கள் எல்லாம் நேர்மையாக நடைபெறும், இது அப்படி ஏற் பட்டதல்லவே. எப்படியும் யூதர்களை ஒழிக்கவேண்டும்; அதற்கு முதற்படியாக டிரைபஸை ஒழிக்க வேண்டும் என்ற ஏற்பாட்டிலேயே எல்லா முன்னேற்பாடுகளோடு செய்யப்பட்டு ஜோடிக்கப்பட்டிருக்கும் வழக்கில் அகப் பட்டுக்கொண்டிருக்கும் டிரைபசுக்கு எப்படி ஜாமீன் விடுதலை கிடைக்கும்? ஆகவே ஜாமீன் மறுக்கப்பட்டது.

## இராணுவ நீதி மன்றம்

ஜெனரல் டார்ட் நீதிபதியாக அமைந்திருக்கின்றார். அவருக்குச் சம அந்தஸ்தில் இருந்த டிரைபஸ் இன்று

கைதிக்கோலத்தோடு கூண்டில் நிறுத்தப்பட்டிருக்கின்ருன். சர்க்கார் வக்கீல் குற்றப்பத்திரிகையைப் பின்வருமாறு படிக்கிருர்:

தாய்நாட்டுப்பாதுகாப்புக்கும், நீதிக்கும், விசுவாசத்துக்கும், பாத்திரமான இந்த முதல் இராணுவ நீதிமன்றத்தில் மேன்மை தங்கிய நீதிபதி, நடுநிலையறிந்த ஜூரர்கள், சட்ட நுணுக்கமறிந்த வழக்கறிஞர்கள் முன்னல், இந்த மாஜி இராணுவ உயர்தர அதிகாரி டிரைபஸின் பேரில் ஏற்பட்ட சந்தே...........

டிரைபஸின் வக்கில்: கெளரவ பிராஸிகூடர் வாசிப்பதைத் தயவுசெய்து நிறுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கி. பிராஸி: என் ?

டி. வக்கீல: எனது கட்சிக்காரராகிய டிரைபஸ் அவர்களை மாஜி இராணுவ அதிகாரி என்று எழுதப்பட்டிருப்பதைத் தயவுசெய்து திருத்திக்கொள்ள வேண்டும்.

கி. பிராஸி:—எதற்காக ?

டி. வக்கீல்: இன்னும் அவர் வகித்துக்கொண்டிருக்கும் உத்தியோகத்தைப்பற்றிய பிரச்சனையே இங்கு எழவில்லை. இன்னும் அவர் உத்தியோகத்தை இழக்கவுமில்லை. ஏதோ அவதூருன குற்றம் சுமத்தப்பட்டிருக்கிருர். அதுவும் இன்னும் சரியெனத் தீர்மானிக்கப்படவில்லை. ஆகவே இந்தவழக்கின் முடிவு தெரியும் வரை அவருடைய பெயர் வருகிற இடங்களிலெல்லாம் இராணுவத்தலைவர் என்று குறி

லாம். அப்படிக்குறிப்பிடக் கிரௌன் பிராசிகூட்டருக்கு இஷ்டமில்லாவிட்டால் 'மிஸ்டர்' என்று குறிக்கலாம். அதை விட்டுவிட்டு, முடியாத வழக்கில் தெரிந்துகொள்ள முடியாத தீர்ப்புக்கு முந்தியே, அவரை, 'மாஜி இராணுவ அதிகாரி' என்று அழைப்பதை நான் விரும்பாதது மாத்திரமல்ல, கடுமையாக ஆட்சேபிக்கிறேன்.

கிரௌன் பிராசிகூடர் நீதிபதி 'yes' என்ருர், கிரௌன் பிராசிகூடர், 'சரி' என்று அந்த 'மாஜி' என்ற வார்த்தையை அடித்துவிட்டு மேற்கொண்டு குற்றப் பத்திரிகையைப் படிக்க ஆரம்பிக்கிருர்.

"மிஸ்டர் டிரைபசின் பேரில் ஏற்பட்ட சந்தேகத்தின்பேரில் சர்க்கார் ஒற்றர் இலாகா அதிகாரிகளை ஏவிப் பார்த்ததில் மிஸ்டர் டிரைபஸ் அவர்களுடைய சொந்தக் கையெழுத்தால் மூன்று இன்றியமையாத பிரஞ்சு ராணுவ இரகசியங்கள் ஜெர்மன் இராணுவ முகாமில் வெளியாயிருக்கின்றன. முதலாவது பட்டாளத்தை நடத்திச்செல்லும் புதிய பாதை, இரண்டாவது பீரங்கிப் படையில் சமீபத்தில் செய்யப்பட்ட மாற்றம், மூன்ருவது மடகாஸ்கர் சம்பந்தமானது.

அந்த ரகசியங்கள் வெளியானதற்கு முதல் பொறுப்பாளி மிஸ்டர் டிரைபஸ் என்பது ஒன்று. அந்த ரகசியக் கடிதங்களும் மிஸ்டர் டிரைபஸ் கையாலேயே எழுதப்பட்டிருக்கின்றன என்பது இரண்டு. இந்த இருவிதக் குற்றங்களைச் செய்ததின்மூலம் நாட்டைக் காட்டிக் கொடுத்த துரோகச்செயல் என்பது மூன்று. யுத்த காலத்தில், யுத்த ரகசியங்களை எதிரி நாட்டுக்கு அனுப்புகிற குற்றத்தை நாட்டிலுள்ள ஒரு சாதாரண மனிதன் செய்துவிட்டாலும், அந்தக் குற்றம் கொடிய கொலைக்

குற்றத்தைக் காட்டிலும் பெரியகுற்றம் என்பதை நன்ருகத் தெரிந்திருந்தும், ஒரு பொறுப்பு வாய்ந்த இராணுவ உயர்தர அதிகாரியே துணிந்துசெய்வது எவ்வளவு பெரிய குற்றம் என்பது நான்கு. ஆக இந்த நான்குவித குற்றங்களைச் சர்க்கார் தரப்பில் சுமத்துகிறேன்.

இந்தப் பிரஸ்தாப வழக்கிலை ஏற்பட்ட சர்ச்சையில் வெளியே இருக்கும் பொதுமக்களுக்கு உண்மையை உணரவேண்டும் என்ற அவாவிருப்பதால், பொதுமக்கள் விருப்பத்தை மதித்து நடக்கும் சட்டரீதியான பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கின்ற குடியரசை நடத்திக் கொண்டிருக்கின்ற தலைவர்கள் உட்பட, இந்த வழக்குமன்றத்தின் நீதிமான்கள் உட்பட, டிரைபஸால் நாட்டுக்கு ஏற்பட்டிருக்கிற இப்பெருந்தீமையையும் ஜெர்மன் இராணுவ முகாமினர் நம்மைப்பார்த்துக் கேலி செய்வதால் ஏற்படுகிற சகிக்கமுடியாத அவமானத்தையும் எண்ணி, பிரஞ்சுநாட்டு தோன்றி இதுவரை ஏற்பட்ட பலபோராட்டங்களில் எதிலேயும் இவ்வளவுபெரிய துரோகச்செயல் நடந்ததில்லை என்று சரித்திரச்சான்றுகளும், அவ்வப்போது செய்துகொண்ட சமாதான உடன்படிக்கைகளும், சாசனங்களும் நினைவூட்டுவதை உங்கள் முன் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

ஆகவே, இதுவே முதல்தட்வையாக ஏற்பட்ட முதல் குற்றம் என்றெண்ணி மன்னித்தோ, அல்லது அதற்காக ஒரு சாதாரண அபராதம் விதித்தோ, சொற்ப நாள் சிறைச்சாலையிலடைத்தோ விட்டுவிடுவீர்களானல் இதைத் தொடர்ந்து பல குற்றங்கள் நடைபெற்று நாடு நாசமாகவேண்டிய சூழ்நிலை ஏற்படாது என்பதற்கு யாரால் உறுதிகூறமுடியும்? இப்படி ஒரு தனிமனிதனுல் ஏற்படுகிற குற்றத்துக்குப் பலநாடுகள் பலியாயிரு

கின்றன என்பதை உங்களில் யாரும் மறுக்கமாட்டீர்கள் என்று எண்ணுகின்றேன்.

ஆகவே மிஸ்டர் டிரைபஸ் செய்த இந்த அடாத செயலை விசாரித்துத் தக்க தீர்ப்பளிக்கவேண்டுமென்று நீதிபதியவர்களைக் கேட்டுக்கொள்ளுகின்றேன். டிரைபஸ் வக்கீல்! நண்பர் கிரௌன் பிராசிகூடர் அவர்கள் மிஸ்டர் டிரைபஸ் செய்ததாகச் சொல்லப்படும் குற்றத்தை மாத்திரம் படிப்பார் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். பிரஸ்தாப வழக்கில் அவர் சொல்ல வேண்டியவை, கனம் நீதிபதியவர்கள் சொல்லவேண்டியவை, மிஸ்டர் டிரைபசுக்காக வழக்காட ஒப்புக்கொண்டு முன்வந்திருக்கிற நான் சொல்ல வேண்டியவை, மிஸ்டர் டிரைபஸ் சொல்ல வேண்டியவை, ஜூரர்கள் சொல்லவேண்டியவை, ஏன்? இப்போது வெளியே கூடியிருக்கும் மக்கள் சொல்ல வேண்டியவை, பிரபல பத்திரிக்கைகள் சொல்ல வேண்டிய அப்பழுக்கில்லாத உண்மைகள் ஆகிய எல்லாவற்றையும் அவரே சொல்லித்தீர்த்து ஒருவழக்கையே முடித்துவிட்டார். ஆனால் தீர்ப்பைமாத்திரம் சொல்லாமல் விட்டுவிட்டார். இந்த இடத்தில் நீதி மன்றத்தின் சம்பிரதாயமும் சட்ட நினைவும் குறிக்கிட்டுவிட்டது என்று நினைக்கின்றேன். இதை நாமே பேசிக்கொண்டிருப்பதால் பயனில்லை. மிஸ்டர் டிரைபஸை விசாரிக்கவேண்டும்.

மிஸ்டர் டிரைபஸ்! இப்போது கிரௌன் பிராஸிகூடர் தங்கள்மேல் தொடரப்பட்டிருக்கும் வழக்கு சம்பந்தமாகப் படித்த குற்றச்சாட்டுகளைக் கேட்டீர்கள். அதற்கெல்லாம் என்ன உங்களுடைய பதில்?

டிரைபஸ்:— மேன்மைதங்கிய நீதிபதியவர்களே! இந்த இராணுவ நீதி மன்றத்தில் வீற்றிருக்கும் நீதி

மான்களே! என் தாய்நாட்டின் ஆணையாகச் சொல்லு கின்றேன் நான் குற்றமற்றவன். இந்தக்குற்றங்களை நான் செய்யாதது மாத்திரமல்ல, என் எண்ணத்தாலும் அவைகளைத்தீண்டவில்லை. நான் உண்மையாகவே என்னை ஈன்ற பிரெஞ்சுநாட்டை எதிரிகளிடம் ஒப் படைக்க வேண்டுமென்று நினைத்திருந்தால், இதைப் போன்ற ரக்சியக்கடிதங்களை எழுதி, அவைகளை ஜெர்மன் இராணுவ முகாமுக்கு அனுப்பி, அவர்கள் இந்த ரகசியங்களையுணர்ந்தபின், நம்நாட்டின்மேல் படையெடுத்து அதன் பிறகு அவர்களுக்கு வெற்றியைத் தேடித்தர நான் இவ்வளவு மறைமுகமான வேலையைச் சுற்றி வளைத்துக்கொண்டு வந்து செய்யவேண்டியதில்லை.

சுமார் நாற்பதினுயிரம் போர் வீரர்களையும், யுத்தத் தளவாடங்களையும், பீரங்கிப் பட்டாளங்களையும், மருந்துக்கிடங்கையும், நான்கேட்டபோதெல்லாம் செல் வத்தையும், என்னிடம் ஒப்படைத்திருந்தீர்கள். ஏன் இந்தப் பிரெஞ்சுநாட்டின் விதியை நிர்மாணிக்க வேண்டிய பெரிய பொறுப்பையே என்னிடம் ஒப்படைத் திருந்தீர்கள். இவ்வளவு சத்திகளையும் வைத்துக் கொண்டிருந்த நான், எதிரிகள் படையெடுத்தபோது நான் ஒருவித தீவிரமான நடவடிக்கையும் எடுக்காமல் படைகளைச் சரிவர நடத்தாமல் இருந்தாலும் நாம் தோற்றுப்போயிருப்போம். அப்போது என்மேல் அந்தக் குற்றம் சாராது. ஏனெனில் இவ்வளவு முன்னேற் பட்டோடு சதிசெய்ய நினைக்கின்ற நான், படைவீரர் கள் சோர்ந்துவிட்டார்கள்' என்று ஒரே வரியை எழுதிவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாம்.

அவ்விதம் படைவீரர்கள் தோற்றதற்குக் காரணம்' என்ன? என்று என்னைச் சமாதானம் கூறும்படி

சர்க்கார் என்னைக் கண்டிப்பாகக் கேட்கும். அதையும் நான் அறிவேன்.

அந்தச்சர்க்கார் கேள்விக்குத் தக்க விடை கூறும் வகையில், 'படைகளை நடத்திச் செல்லும் பாதையில் உள்ள நீர்த்தேக்கங்களில் நானே விஷத்தைக் கலக்கி விட்டு, இதை எதிரிகள் செய்துவிட்டார்கள், ஆகையால் போர்வீரர்கள் குடிக்கத் தண்ணீரில்லாமல் சோர்ந்து பின்னடைந்து விட்டார்கள்.' என்று சமாதானமும் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம். அல்லது அதே விஷங்கலக்கும் முறையைப் போர்வீரர்கள் உண்ணும் உணவிலும் நான் கையாளலாம். வெடி மருந்துக்கிடங்குக்கு நானே தீவைத்துவிட்டு எதிரிகள் வைத்துவிட்டார்கள் என்று சமாதானம் கூறிப் பழியை எனக்குப் பிடிக்காத சிலர்மேல் சுமத்தி அவர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டு நான் தப்பித்துக்கொண்டிருக்கலாம்.

இவ்வளவு சுலபமான வழிகள் இருக்க, இவை எல்லாம் செய்யமுடியும் என்று தெரிந்திருக்கிற நான் இந்தச்சுலபமான வழிகளைவிட்டுக் கடினமான வழியைப் பின்பற்றவேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. அவற்றை எல்லாம் செய்ய இடங்கொடுக்காத என்மனம், அந்த அற்ப காரியத்தைச்செய்ய இடங்கொடுக்குமா என்பதை நீதிமான்களாகிய நீங்களே முடிவுகட்டுங்கள்.

மேலும் மற்றொன்று கூறவிரும்புகிறேன். எதிரிகள் காட்டும் ஆசைவார்த்தைகளுக்கு ஏமாந்து தன் நாட்டின் இராணுவ ரகசியத்தைக் காட்டிக்கொடுத்து தான், தன்படை, தன் நாடு எல்லாம் சரணாகதியடைந்த பிறகு

காட்டிக் கொடுத்தவனை எதிரிகள் கண்ணியமாக நடத்துவார்களா என்பதை அறியாதவனா நான்? எந்தப் பொதுமக்கள் உப்பால் உடலை வளர்த்தேனோ, அதே பொதுமக்களையும், நாட்டையும் காட்டிக்கொடுத்த துரோகியைத் தூக்கிலேற்றுங்கள் என்றுதான் எந்த நாணயமான சர்க்காரும், சட்டமும் சொல்லும். அதையும் நான் உணராதவனல்ல. ஏனெனில் என்னிடம் மகத்தானதோர் இராணுவத்தலைமை ஒப்படைக்கப் பட்டதிலிருந்தே என்னுடைய நாட்டுப்பற்றையும், என் திறமையையும் அது நன்ருக உணர்ந்திருக்கின்றது என்பது தெரியவில்லையா? ஆகையாலேதான் துரோக சிந்தை என் நெஞ்சில் குடிபுகவில்லை.

இல்லையானல் என் தாய்நாடு என்னை இவ்வளவு கௌரவித்திருக்கமுடியாது. ஆனல், எக்காரணத் தாலோ இன்று என்னைச் சந்தேகித்துக் கம்பிக்குள் தள்ளி கூண்டில் நிறுத்தியிருக்கிறதென்ருல் என்னல் ஒன்றையுமே புரிந்துகொள்ள முடியவில்லை. என்னைத் தூய்மையானவன் என்று அது என்னை நினைத்தவரையிலும் என்னைக் கண்ணியமாகக் காப்பாற்றிக் கண்ணிமைபோல் காப்பாற்றி இருக்கிறது. இன்று அது என்மேல் சந்தேகப்படுகின்றதென்ருல், அதன்சந்தேகம் ஒவ்வொன்றையும் விளக்கிக்கூறச் சக்தியற்றுச் சிறகொடிந்த பறவைபோல் சிறையில் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றேன்.

ஆக்வே என் தாய்நாட்டுக்கு நான ஓர் உண்மையான புதல்வன் என்ற முறையிலே, நான் ஒன்றே ஒன்றைமாத்திரம் உறுதியாகவும், உண்மையாகவும், என் தாய் நாட்டின்மீது ஆணையாகவும் கூறமுடியும் நான் குற்றமற்றவன் என்று:

என்றலேயே விளங்கிக்கொள்ளமுடியாத வழக்கு ஒன்று தொடுக்கப்பட்டிருக்கின்றதென்றல் என்னல் எப்படி தக்கஆதாரங்களைச் சேகரிக்க முடியும். சூது, வஞ்சனை, பொய், பொருமை ஆகிய அவ்வளவும் என்னைப் பழிதீர்க்க எண்ணிஞல் அதனல் துன்பப்பட வேண்டியவன் நான்மட்டிலுமல்ல. இந்த நாடே அவமானப்பட்டாகவேண்டும். அவைகளை இந்தநாடு சகித்துக்கொண்டிருப்பது பெருத்தஅவமானமாகும். அந்த முறையில் என் நாட்டுக்கேற்பட்டிருக்கிற பெருங் கேட்டுக்காக என் உயிர் பலியாகுமாஞல் நான் மிகமிக அதிர்ஷ்டசாலிதான், ஏனென்றல் நயவஞ்சகர்கள் சூழ்ச்சியால் நாடு நலிவுற்றுத்தலைசாய்கிறபோது அந்தச்சகிக்க முடியாத கோரத்தைக் கண்ணல் பார்த்துக் கஷ்டப்பட வேண்டியதில்லாமல் சலனமற்ற சாந்த நிலையடைகிறேன். இந்த இரண்டிலொன்று எனக்கு ஆறுதல் அளிக்கட்டும். நான் என்நாட்டுக்காகச் சிந்திய இரத்தத்தில் விஷக்கிருமிகளும், பொல்லாதபூச்சிகளும் பொருமைக்குணமும் கலந்திருந்தால் அவை என்முடிவோடு முடிந்துபோகட்டும். அப்படி இல்லையென்றல் நான் உயிரோடிருக்கும்போதோ, அல்லது என்முடிவுக்குப் பிறகோ என் தூய்மையை என்ருவது கண்டுபிடித்துக் கண்ணீர்சிந்தட்டும். இந்த ஒருமுடிவிலே என் வாளின் ஆணையாக, இதுவரை நான்வகித்திருக்கும் பதவியின் ஆணையாக, என் குடும்பத்தின் ஆணையாக எல்லாவற்றிற்கும் மேலான என் பெருமை பொருந்தியபிரெஞ்சு மண்ணின் ஆணையாகச் சொல்லுகின்றேன் நான் குற்றமற்றவன் என்று.

நீதிபரிபாலனத்தின் தலைவரே! இந்த நிரபராதி குற்றமுடையவஞ அல்லவா என்பதை இனித் தாங்களே தீர்மானிக்க வேண்டியவர்கள். என்மேன்மைக்கும்

உயர்வுக்கும்'' ஆக்கமளித்த இராணுவ சக்தியின் ஆணை யாக நான் குற்றமற்றவன். கொடுமைகள் என் குணத்தை அடிமைப்படுத்திவிடாது என்ற அசையாத நம்பிக்கையின் ஆணையாக நான் குற்றமற்றவன். நான் என் உடைவாளை உருவிக் கொடியின்கீழ் நின்று முதன் முதலில் செய்து கொண்ட ராஜவிசுவாசப்பிரமாணத் தின் ஆணையாக நான் குற்றமற்றவன்.

டிரைபஸ் வக்கீல் லபோரி

கனம் பொருந்திய நீதிபதியவர்களே! ஜூரர்களே! இதுவரை மிஸ்டர் டிரைபஸ் சொன்னவைகளைக் கேட் டீர்கள். பிரஸ்தாபவழக்கு நமது இராணுவத்துக்குச் சம்பந்தப்பட்டது. இந்த வழக்குக்குச்ச ம்மந்தப்பட்ட மிஸ்டர் டிரைபஸ் ஒரு உயர்தர இராணுவத் தலைவர். இராணுவத் தலைமை ஒரு சாதாரண உத்தியோகமல்ல என்பது நாமனைவரும் உணர்ந்ததே. ஒரு நாட்டின் உயிர்நாடியைப் போன்றது. மேலும் இரத்தம் சுண்டிப்போயிருக்கும் ஒருநோயாளிக்குத் தன் இரத்தத்தைத் தானம்செய்ய வேண்டியதைப்போன்றது. அதற்காகத் தாராளசிந்தையும், அஞ்சா நெஞ்சமும், அறமீயும் பண்பும் வேண்டும். அதற்குத் தகுதியுடைய வனையே சர்க்கார் இராணுவத் தலைவனாகத் தீர்மானிக் கிறது. அந்தமுறையில் நாட்டின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்தான் மிஸ்டர் டிரைபஸ் என்பதை மறுக்க இதுவரை எந்தச் சக்தியும் முன்வரவில்லை.

அவ்வளவு மகத்தான பொறுப்புகளை ஏற்றுக்கொண் டிருக்கின்ற ஒருவன் தன் உத்தியோகத்தை எண்ணி இராணுவச்சட்டங்களை மாத்திரம் மதித்து நடந்து விட முடியாது. அந்த இராணுவச் சட்டப்படிப் பார்த் தால் படைகளைக்காப்பாற்றுவது, எதிரிகளைத் தோற்

கடிப்ப... எல்லைகளைக் காப்பாற்றுவது போன்ற பொறுப்புகள் பலவாறுகச் சிதறிப்போகின்றன. ஆகவே இவ்வளவிலும் ...ாவதொன்று தவறிவிடப்பட்டுப் போகுமானால் ...தக்குற்றத்தை இராணுவத் தலைமையின் மீது போ... விடுகின்றோமேயன்றி, மேற்சொன்ன எல்லாவற்று... மேலாக நாட்டையே காப்பாற்றித் தீரவேண்... பொறுப்பு இராணுவத் தலைவனுக்கு உண்டு என்பதை... ...லநேரங்களில் நாம் அறவே மறந்து விடுகின்...

மேலும் ஒரு நாட்டின் இராணுவத் தலைவன் வேற்றூரானாக இருப்பதுமில்லை. அந்தநாட்டில் பிறந்தவனையேதான் அந்தநாட்டு இராணுவத்துக்குத் தலைவனாக்குகின்றோம். அப்படி உத்தியோகம் அளிக்கப்பட்ட இராணுவத்தலைவனுக்கு உத்தியோகப்பற்றில்லாவிட்டாலும், தாய்நாட்டுப்பற்று இருந்துதீருமே என்பதை நாம் மறுப்பதற்கில்லை. அந்தவகையில் மிஸ்டர் டிரைபஸ் தாய்நாட்டுப்பற்றில்லாதவர் என்று நம்மில் யாரும் மறுக்கமாட்டோம்.

மிஸ்டர் டிரைபஸ் உத்தியோகம் வகித்த இவ்வளவு நாட்களாகச் செய்யாத ஒரு இழிசெயலைச் செய்தார் என்பது நம்பத்தகாதது. லஞ்சம் வாங்கிக்கொண்டு இப்படிச் செய்திருப்பார் என்று உங்களில் பலர் சந்தேகப்படுகின்றீர்கள். லஞ்சம் வாங்கிப் பிழைக்கவேண்டிய அவ்வளவு வறுமையில் அவரை நாடு வைத்திருக்கவில்லை. அவருடைய தனிப்பட்ட குடும்பமும் அவ்வளவு அந்தஸ்து குறைந்ததல்ல. ஒரு தொழிற்சாலையைச் சொந்தமாக நடத்திக்கொண்டிருந்த அல்சேஸ் என்பவரின் இரண்டாவது மகனாக 1859ல் பூன் என்ற நகரத்தில் பிறந்தவர். இன்னும் அவருக்கு அங்கே தன் தந்தையால்

சம்பாதித்து வைக்கப்பட்ட ஏராளமான சொத்துண்டு. ஆகவே அந்தவகையிலும் அவர் இவ்விதப்பழி தொழிலை செய்யவேண்டிய தேவைப்படாதவர். உத்தியோக உயர்வுக்காக அப்படிச் செய்திருப்பார் என்று நீங்கள் கருதுவீர்களானல் இதைவிட வேறு உயர்வான உத்தியோகம் வேறு எந்தநாட்டுப் பட்டாளத்திலும் நிச்சயமாகக் கிடைக்காது என்பதை அவர் நம்மைவிட அதிகமாக உணர்ந்திருப்பார். ஏனென்றல் ஒரு சாதாரண போர்வீரனைச் சேர்ந்து தன்முயற்சியாலும், திறமையாலும், நன்னடக்கையாலும் இவ்வளவு முன்னேறியவர், திடீரென்று, அதுவும் எதிரிகளின் இராணுவத்தில் வேலை தேடத் தாவிக்குதிக்கமாட்டார் என்பதையும் நாம் நினைக்கவேண்டும்.

ஆகவே ஒரு வழக்கைப்பற்றி நாம் ஆராயும்போது, வழக்குக்குச் சம்பந்தப்பட்ட நபர், அந்த நபரின் பேரில் சுமத்தப்பட்டிருக்கிற குற்றம் ஆகியவைகளைப்பற்றி நாம் முடிவுகட்ட வேண்டுமானல், அவருடைய முந்திய நடவடிக்கைகள், தற்காலத்தில் ஏற்பட்ட வழக்குக்கு ஆதாரமென்ன என்பவைகளைப்பற்றி நிதானமாக ஆராய்வது அவசியமெனக் கனம் நீதிபதியவர்களுக்கு மிகப் பணிவாகத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். மேலும் பிரஸ்தாப வழக்கில் சம்மந்தப்பட்டிருக்கும் நபராகிய மிஸ்டர் டிரைபஸ் அடிக்கடி தவறுதல்கள் நடக்கக் கூடிய இராணுவ வேலையில் இதுவரை ஒருவித தவறும் செய்து, அதனல் மேலதிகாரிகளால் குற்றஞ் சாட்டப்பட்டு, அதற்காகப் பெறவேண்டிய சாதாரண தண்டனையோ, கரும்புள்ளியோ பெற்றிருக்கவில்லை என் பதையும் இந்த நீதிமன்றத்தின் முன்னல் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

ஆதலால் கனம் நீதிபதியவர்கள் இந்த வழக்கைத் திர ஆலோசித்துத் தக்க நீதி வழங்கவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

## ஜூரர்கள்

ஜூரர்கள் அனைவரும் எழுந்து உள்ளே சென்றூர்கள். அங்கே என்ன பேசப்போகின்றூர்கள் என்று வாசகர்களுக்கே நன்ருகத் தெரியும். உண்மையாக நடக்காத ஒரு நிகழ்ச்சியைச் சில சூழ்ச்சிக்காரர்களால் வழக்காக அலங்கரிக்கப்பட்டுப் பழிவாங்கும் உணர்ச்சியோடு, ஜூரர்களை எல்லாம் விலைக்கு வாங்கி, தங்கள் இயக்கத்தைச் சார்ந்த நீதிபதியின் முன்னுல் கொண்டுபோகப்படும் வழக்கில் உண்மைக்கும், நீதிக்கும் இடமெங்கே இருக்கப் போகின்றது? எல்லோரும் ஒத்திகை பார்த்ததைப்போல் டிரைபஸ் குற்றவாளி என்றனர். அதில் ஒருவராவது மற்ற ஜூரர்களுக்கு நான் மாறுபடுகிறேன் என்று சொல்லவேயில்லை. ஆகவே டிரைபஸ் குற்றவாளி என்பதைப் பல நாட்கள் நினைத்துக் கொண்டிருந்ததை இன்று பகிரங்கமாகச் சொல்லிவிட்டார்கள். அவ்வளவு தான்.

## தீர்ப்பு

நீதிபதி டார்ட் என்பவர் தீர்ப்பைப் படிக்கின்றூர் "இதுவரை இருதரப்பு வக்கீல்களும், டிரைபசும் சொல்லியவற்றைக் கவனமாகக் கேட்டு ஜூரர்களை அபிப்பிராயம் சொல்லும்படி கேட்டதில் அவர்களனைவரும் ஏகோபித்த அபிப்பிராயத்தைச் சொன்னூர்கள். நான் என்னைப் பொறுத்தவரை டிரைபஸ் விஷயமாக உண்மையாகவே வருந்துகிறேன். எனினும் அவரை இந்த நிலை

யில் காப்பாற்ற முடியாத நிலையில் இருக்கின்றேன். ஏனென்றால் இது நீதிமன்றம். இதில் கோபதாபங்களுக்கோ, தயைதாட்சண்ணியங்களுக்கோ இடமில்லை. நட்பும், நீதியும் ஒன்றெனச் சொல்லுகிறார்கள் பலர். நான் அந்தத் தத்துவத்தை ஒப்புக்கொள்ள முடியாதவனாகிறேன். ஏனென்றால், நட்பும், நீதியும் அவ்வளவு கொடிய பகைகொண்ட வார்த்தைகள். உதாரணம் வேண்டுமானால், இப்போது இந்த வழக்கில் சம்மந்தப்பட்டிருக்கும் டிரைபஸ், என்னுடைய நெருங்கிய நண்பன் என்று பாராட்டினால், அவன் விஷயமாக நான் செலுத்தவேண்டிய நீதியைப் புறக்கணிக்க வேண்டிவரும். அல்லது அப்படி நீதியை நான் புறக்கணிக்காமல் நிலை நாட்டுவேனானால், நிச்சயமாக நட்புக்கு இடமில்லாமல் போய்விடும். இதற்கிடையிலே நம்போன்றவர்கள் ஊசலாட வேண்டியிருக்கிறது. பிரஸ்தாப வழக்கு உள்நாட்டு விவகாரத்தை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டிருந்தால் எப்படியாகிலும் குடியரசுத் தலைவரைக் கருணைகாட்டும்படி சிபார்சு செய்து அப்படி ஒரு மன்னிப்பு மனுவை (Mercy Petition) போட, டிரைபசுக்குச் சந்தர்ப்பத்தை யளிக்கலாம். ஆனால் இந்த வழக்கு வெளிநாட்டு விவகாரத்தில் கால் ஊன்றியிருக்கிறது. அதுவும் இராணுவத்துக்குச் சம்மந்தப்பட்டிருக்கிறது. அதன் காரணமாகத்தான் வெளிநாட்டுப் பத்திரிகாலயங்கள் இதன் முடிவை மிகக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கின்றன. இந்த வழக்கின் முடிவு ஒன்று உலகத்தின் அந்தகாரத்தைப் போக்கும், அல்லது இருள் சூழும். இந்த இரண்டிலொன்றை உலகம் எதிர்பார்க்கிறது.

இதில் நாம் கொஞ்சமாவது தவறிவிட்டால் நீதியைச் சிறையிலடைத்து டிரைபஸை விடுவித்தவர்களா

வோம். டிரைபஸ் தான் செய்த இராணுவ சேவையில் இதுவரை நல்லவராக நடந்திருக்கலாம். அதை நானும் ஒப்புக்கொள்கிறேன். முப்பதாவது வயதுவரை நல்லவனாக நடந்த ஒருவன் பிறகு ஒரே ஒரு கொலையைச் செய்துவிட்டால், அவனுடைய முப்பதாண்டு நன்னடக்கையைப் பார்த்து எந்த நீதிமன்றமாவது மன்னித்து விடமுடியுமா? நீக்க முடியாத சந்தர்ப்பத்தால் ஏற்படுகிற குற்றங்கள், ஒருவனால் பலமுறை செய்து செய்து பழக்கப்பட்டதல்ல. ஆகவே அவன் செய்த ஒரே ஒரு குற்றத்திலிருந்தும் அவன் தப்பமுடியாது. அதே போன்றதுதான் டிரைபஸின்மேல் ஏற்பட்டிருக்கிற குற்றச்சாட்டும். குற்றச்சாட்டுகளுக்குப் போதிய ஆதாரங்கள் உண்டு. ஆனால், தான் நிரபராதி என்பதற்கு டிரைபஸிடம் ஒரு சிறிய ஆதாரமுமில்லை. ஆதாரத்துக்கும், ஆன்மாவுக்கும் ஒருவிதத் தொடர்புமில்லை. ஆதாரம் சொல்லுவதைத்தான் ஆன்மா ஒப்புக்கொள்ளவேண்டுமே தவிர, ஆன்மா சொல்லுவதை ஆதாரம் ஒப்புக்கொள்ள வேண்டுமென்பது நீதிமன்றத்தைப் பொறுத்தவரையும் இல்லை. அது எங்கேயாவது குருக்கள் வாழும் இடமாக இருக்கலாம். ஆகவே நீதி நிலைநாட்டப்பட வேண்டுமானால் ஆதாரங்கள் கண்டிப்பாகத் தேவை. அந்த வகையில் டிரைபஸ் துர்பாக்கியனாகிறான். இதுவரை கிடைத்த ஆதாரங்களைக் கொண்டும், வெளியிலே இந்த வழக்குச் சம்மந்தமாக ஏற்பட்ட சர்ச்சைகளைக் கொண்டும், ஜூரர்கள்கொண்ட ஒரு முகமான முடிவைக் கொண்டும், டிரைபஸை குற்றமுள்ளவன் என்று தீர்மானித்து, ஆயுள் தண்டனை விதித்து, டெவில்ஸ் தீவுக்கு அனுப்ப வேண்டுமென்று தீர்ப்பளிக்கின்றேன்'

இது சொல்லி முடிந்தவுடனே தடால் என்று ஒரு சத்தம் கேட்கிறது. கோர்ட்டாரனைவரும் சத்தம் வந்த

தாகவே கருதினார்கள். இராணுவ முகாமில், 'யூதர்கள் ஒழிக' என்று எக்காளமிட்டனர். குடிவெறியால் எங்கே செல்கிறோம், என்ன செய்கிறோம் என்பதே தெரியாமல் இரண்டு மூன்று நாட்கள் பாரிஸ் பட்டணத்தையே பாழாக்கிவிட்டார்கள். ஒரு நாட்டுக்குத் தோன்ற வேண்டிய நல்ல அறிகுறிகள் எல்லாம் இந்த நாசகாரர்களால் மறைக்கப்பட்டுவிட்டன. வெறியர்கள் ஆடி ஓய்ந்தனர். இன்னும் ஒரே ஒரு நாள் கொண்டாட்டம் இருக்கிறது. அந்த நாள் தான் சிறையிலே இருந்து டிரைபஸை டெவில்ஸ் தீவுக்குக் கொண்டுபோகக் கப்பலேற்றப்படும் நாள். அந்த நாளையும் கண்ணால் கண்டுவிட்டால் போதும். அதுவே யூத எதிர்ப்புச் சக்திக்குப் புத்துயிரளிக்கும் நாள், புனித நாள், பொன்னாள், என்றும், அன்று யார் யாரைச் சந்திப்பது, யார் வீட்டில் யாருக்கு விருந்து, எந்தவிதமான விருந்து என்றும் சந்தோஷமாக விரல்களை விட்டுப்பேசிக் கொண்டிருக்கின்றனர்.

## சிறையில் சந்திப்பு

இடையிலே இரும்புக்கம்பிகள். இப்பக்கம் மேடம் டிரைபஸ், உட்பக்கம் டிரைபஸ். என்ன பேசுவார்கள்? என்ன பேசுகின்றார்கள் என்பதைக் கவனிக்க அங்கே ஒரு ஆள். லௌகீக சம்பந்தமாக அன்றி அரசியலைப் பற்றிப் பேசக்கூடாதே.

“மீண்டும் காண்பேனா? மேடம்!

எப்படிச் சொல்லமுடியும்; டிரைபஸ்? காணமாட்டோம் என்று. நிச்சயமாகச் சொல்லமுடியாது டிரைபஸ்.

இது என் ஆறுதலுக்காகச் சொல்லும் வார்த்தை. மேடம்! காலத்தாலும் பிரிக்கமுடியாமல் இதுவரை

வாழ்ந்தோம். இன்று பிரிக்கப்பட்டோம். மேடம்! கலங்காதே. நான் குற்றமற்றவன். உடலால் பிரிக்கப் பட்டுவிட்டோம், உள்ளத்தாலல்ல. ஒருநாள் இவ் வுலகம் உண்மையைக் கண்டுபிடித்து என்பால் இரக்கம் காட்டியே தீரும். அதுவரை நான் சாகாமல் இருக்க இயற்கை துணை செய்யவேண்டும். யுத்தகளத்தில் நான் சேவை செய்தபோது எவ்வளவோ நாட்கள் நான் உன்னைப் பிரிந்திருக்கின்றேன். அப்போதெல்லாம் கலங்கவில்லை.

டிரைபஸ்! மீண்டும் தாங்கள் வந்துவிடுவீர்கள் என்ற நம்பிக்கையிலிருந்தேன். அது மட்டுமா? அப்போ தெல்லாம் இப்படி அபாண்டப் பழி சுமத்தப்படவில்லை. அன்று இதைவிட அபாயமான இடங்களுக்கெல்லாம் தாங்கள் சென்றிருக்கலாம். ஆனால் வீரனாகச் சென்றீர். இப்போது குற்றவாளி என்று பழி சுமத்தப்பட்டுச் செல் கிறீர் இதை நினைக்கும்போது என் நெஞ்சம் வெடித்து விடும்போல் இருக்கிறது.

மேடம்! கலங்காதே கண்ணே! காலம் என்பால் கருணை காட்டட்டும். இன்றேல் கடலாகிலும் என் பால் கருணைகாட்டிக் கொல்லட்டும். நாட்டையே காப்பாற்றியவன் நான், இன்று உன் ஒரு உயிரைக் காப்பாற்றச் சக்தியற்றவனாய்க் கம்பிக்கு இப்பால் இருக் கின்றேன். நமது வாழ்வின் சகாப்தம் முடிந்துவிட்டது என்று முடிவு கட்டாதே. என்னிடம் குற்றமில்லையாயின் மீண்டுமோர் புனித உலகில் நடமாடுவோம். இரத்தஞ் சிந்திய என்னை நாடு ஒரு நொடியில் நிராகரித்துவிட்டது. ஆனால் நான் உன்னை நிராகரித்துவிட முடியுமா? என் றும் என்மனதில் குடிகொள்ளும் ஒரு உருவம் உண் டென்றால் அது நீதான். ஒரு வீரனுடைய மனைவியா

இப்படி விம்மி விம்மி அழுதுகொண்டிருக்கின்றாய். பேதமை உள்ளத்துக்கே பெண்கள் இதயந்தான் இருப்பிடம் என்பதை நீ நிரூபித்துவிட்டாய். எனக்காகப் பேச யாருமே இல்லை என்கிறாய். இதுவரை எனக்காகப் பேசிய பிரபல வழக்கறிஞர் லபோரி இல்லையா? அழாதே. மதியை மேகம் நிரந்தரமாக மறைப்பதில்லை. அதே போன்றது தான் என் நிலைமையும்'' என்று ஆறுதல் கூறி அனுப்பிவிட்டான்.

## இராணுவத் திடலில்

தண்டனையடைந்த இராணுவத் தலைவன் டிரைபஸை டெவில்ஸ் தீவுக்குக் கொண்டுபோவதற்கு முன்பு போர் வீரர்கள் முன்னால் அவனை அவமானப்படுத்தவேண்டு மென்று கருதி, அவனுக்குச் சிறையில் பழையபடி இராணுவ உடைகளை மாட்டி, வாள் தொங்கவிட்டு, நாற்பதாயிரம் போர்வீரர்கள் அணிவகுத்து நிற்கும் திடலுக்குக் கொண்டுபோய் நிறுத்தப்படுகின்றான்.

கர்னல் பக்ஷி என்பவன் டிரைபசுக்கு நேரே வந்து நின்று அவன் ஆடைகளையும், இராணுவச் சின்னங்களையும் ஒவ்வொன்றாகக் கழற்றிக் கடைசியில் அவன் இடுப்பில் தொங்கிக் கொண்டிருந்த உடைவாளைத் தன் கால் முட்டியில் வைத்து இரண்டு துண்டாக உடைத்து வீசி எறிகின்றான். ஏனென்றால் அந்தத் துரோகி தொட்ட உடைவாளை வேறு யாரும் தீண்டக்கூடாதாம். வேண்டு மென்றே அவமானப்படுத்திவிட்டான். சராசரி ஒரு சாதாரணப் போர்வீரனுக்குக் காட்டும் அனுதாபத்தைக் கூட இவனுக்குக் காட்டவில்லை. தன்னைப் பார்த்தவுடனே எழுந்து நின்று தலைவணங்கும் மேன்மைக்குரிய தலைவனை இவ்வளவு கேவலமாக நடத்தினார்கள்.

மனிதன் எதை விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் கௌரவத்தை விரும்பியே திரிவான். அந்த முறையில் அவன் எவ்வளவோ கொடிய தண்டனைக்கு ஆளாயிருந்தாலும், இறுதியாக இருந்த கௌரவத்தையும் விட்டு வைக்கவில்லை. ஆம், அவன் இன்று ஒன்றும் பேச முடியாதவன். அவனுக்காக ஏதாவது பேசத் துணிந்து முன்வரவேண்டுமானால் நீதி ஒன்றுதான். அந்த நீதியை நீசர்கள் காலடியிலே மிதித்துக் கொண்டிருக்கின்றார்கள். பிரபுக்கள் பேசலாம், அவர்களுக்கு இதுவா வேலை? நியாய சிந்தை யுள்ளவர்கள் பேச முன்வரலாம். அவர்களுக்கு நெஞ்சுரம் வேண்டுமே? பத்திரிகைகள் பேசலாம். பிரதிகள் அதிகமாக விற்காதே? இவனை எதிர்த்து எழுதினால்தானே விற்பனை அதிகம். அப்படியிருக்க எப்படி ஆதரித்து எழுதும்? பேச்சாளன் முன்னுக்கு வரலாம். நெஞ்சை நெரித்து விடுவார்களே? எழுத்தாளன் முன்வரலாம். பேனாவைப் பிடுங்கி விடுவார்களே? பொதுமக்கள் வரலாம். அவர்கள் குடிசைகளுக்குத் தீ வைத்துவிடுவார்களே? சட்ட நிபுணன் முன்வரலாம். என்னத்துப் போய்விடுமே? சர்க்கார் உத்தியோகஸ்தன் முன்வரலாம். சமாதானம் கூறவேண்டுமே சர்க்காருக்கு? அதுவல்லவா அன்றைய பிரான்சு நாட்டின் நிலைமை. என்றாலும் அவ்வளவு பெரிய அகண்ட சாம்ராஜ்யத்தில் ஒருவனே துணிந்து முன்வந்தான். அவன்தான் ஏழையின் தோழன் எமிலி ஜோலா. தயை தாட்சண்ணியம் எதையுமே பொருட்படுத்தாமல், கயவாளிகளின் கரடு முரடான மூளை நிலத்தில் எழுத்தேர் கட்டி உழுது, எங்கும் பரபரப்பை யுண்டாக்கி நீதி விதை விதைத்து, நீசர்களின் முகமூடியைக் கிழித்தெறிந்தவன் நிகரற்ற பேனாவீரன் ஜோலா. பல்லிளிப்பு, பரிகாசம் இவைகளைப் பக்கத்திலேயே சேர்க்காமல் முகத்தில் இரத்த வடுக்கள்

தேங்கத் தேங்க முழுமூச்சாக மூர்க்கர்களை எதிர்த்து அண்டத்தைக் கலக்கியவன் சண்டமாருத எழுத்தாளன் எமிலி ஜோலா. ஜோலா என்ற பெயரைக் கேட்டவுடன் சூதர்களின் இருதயம் சுக்கு நூறாக வெடிக்கும்படி சிங்கக்கனவாகத் தோன்றிய அரிமா. ஆண்சிங்கம் ஒன்று மூறி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டதைப்போல "செஸானே! புறப்படு வீட்டுக்கு, பொறுப்பு வீழ்ந்து விட்டது தலைமேல்" என்று கையில் பல பத்திரிகைகளோடு காற்றுபோல் பறந்து செல்கிறான், எரிமலை ஒன்று எழுந்து நடந்ததைப்போல.

## ஜோலாவின் களம்

வீட்டிற்குள் சென்றவுடனே யாரிடமும், எதையும் பேசாமல் மேஜைக்கருகில் அமர்ந்தான். அன்று அவன் முகத்தில் தோன்றிய சுறுசுறுப்பைப் பார்த்துக் குறுக்கே ஒன்றும் பேசக்கூடாதென்று செஸானே மறைவாகப் போய்விட்டான். செஸானே, யாரையும் அந்தச் சமயம் ஜோலாவைப்பார்க்க அனுமதிக்கவில்லை. எழுதத் தொடங்கினான் என்றால் போர்க்களத்தில் குதித்துவிட்டான். காதல் கட்டுரையா எழுதுகின்றான்? பலமிக்க பிரெஞ்சு நாட்டோடு போர்தொடுக்க ஆயுதங்களைச் செப்பனிடுகிறான். வலிமைமிக்க பீரங்கிகள் கக்கிய கனல் பொறிகளெல்லாம் இவன் பேனா கக்கிய கருத்துக்கள்முன் மண்டியிட வேண்டும். அப்படி அல்லவா தயார் செய்து கொண்டிருக்கின்றான்.

டிரைபஸ் வழக்குச் சம்மந்தமாக நீதிமன்றம் நடந்துகொண்ட பாரபட்சத்தைத் தாக்கப்போகின்றான். குறிபார்த்துக் கொண்டிருக்கின்றான். குறி சரியாகக் கிடைக்கவில்லை.

## தீவு நோக்கி

கைதியை ஏற்றிக்கொண்டு கப்பல் புறப்பட்டு விட்டது. சிறிய சிறிய கட்டிடங்களெல்லாம் மறைந்து, பிறகு மணிக்கூண்டுகள் மறைந்து, அதன் பிறகு பெரிய பெரிய கட்டிடங்களெல்லாம் மறைந்து, டாவில்லி என்ற துறைமுகப்பட்டினமே மறைந்து, 10, 15 மைல்களுக் கப்பால் சென்றுவிட்டது கப்பல். சேயைச் சுடுகாட்டில் தகனம் செய்தவர்கள்போல் திரும்பினூர்கள் சிலர். எதிரியை வென்று வெற்றிக்கொடி நாட்டித் திரும்பும் வீரர்கள்போல் எக்காளமிட்டுத் திரும்பினர் பலர்.

கருநிறக்கடல். மேலே கார்மேகம். கண்கண்ட தூரமெல்லாம் கடல். மீன்கள் சுதந்திரமாகத் துள்ளி விளையாடுகின்றன. இந்தத் துர்ப்பாக்கியன் கைகளிலே விலங்கு. தாயகம் மறைந்துவிட்டது. இனி இந்தத் தரணியே மறைந்துவிடலாம். ஆனால் " நான் மறைவ தென்னுளோ? போர்க்கப்பலேறிப் பல வேற்றுநாடு களுக்குச் சென்று படையெடுத்திருக்கின்றேன். இன்று பொல்லாங்கு சுமத்தப்பட்டு இந்தப் பொல்லாத கப்ப லில் பூதத் தீவுக்குச் செல்கின்றேன். எவ்வளவு வேகமாக முன்னேறினேனே அவ்வளவு வேகமாகக் கீழே விழுந்து விட்டேன். சாதாரணத் தரையிலா விழுந்தேன்? சகிக்க முடியாத அவமான சாகரத்தில் விழுந்துவிட்டேன். பிரெஞ்சுத் தாயகமே! உனக்கு நான் இனி ஒன்றும் செய்ய முடியாதவனாய்விட்டேன், நீ வாழி! என்று சொல்வது தவிர. அநீதியால் பழி சுமத்தப்பட்டு என்னை மட்டிலும் தீவுக்கு அனுப்புவதாகச் சிலர் எண்ணுகிறார்கள். இல்லை, இல்லை, என் அருமை நாட்டின் நீதியை வழியனுப்பு கிறார்கள். உனது பந்தபாசங்கள் என் மனம் விட்டகல வில்லை. இவ்வளவு விசுவாசத்தோடு இருந்த உன்

உண்மைகளை எப்படி அனுப்பத் துணிந்தாயோ? உனக்கு நான் ஏதாவது கைம்மாறு செய்யாமல் விட்டிருந்தால் என் தூய்மையின் பேரால் நிச்சயம் திரும்பி வருகின்றேன். அதுவரை நீ கள்ளர்கள் கையிலகப்பட்டு அழியாதிருப்பாயாக. கடல் நீர், கண்ணீர் இரண்டும் உவர்ப்புடையது. வற்றுதது. மனிதன் மாண்டால் ஒருசமயம் கண்ணீர் வற்றிவிடலாம். வற்ருக் கடலே! நீ வையகம் அழியும்வரையிலும் இருப்பாயல்லவா? என்? அதற்குப் பிறகும் இருப்பாய். இருந்தாயானல் அண்டகோளங்கள் அழிந்து உன்னிடம் வந்து சேரும். என் தாயகப் பிரெஞ்சு நாட்டுக்குச் சொல், அன்ருெர் நாள் கண்களில் நீர் சிந்தியறியாத மாவீரன் ஒருவன், டிரைபஸ் என்ற பெயருடையான், 'குற்றமற்றவன்' என்று உன்னிடம் சொல்லும்படி சொன்னுன் என்று சொல். அந்த ஆறுதலோடு அந்தமண் உன்புனலோடு கலக்குமாக." இப்படிப் பலவாருகப் பேசிக்கொண்டே பல இரவுகள் கழித்தான். இறுதியில் டெவில்ஸ் தீவில் கொண்டு போய்த் தள்ளப்பட்டான்.

"ஏதாவது செய்தி இருக்கின்றதா சொல்ல?" என்றனர் மாலுமிகள். 'நான் குற்றமற்றவன்' என்ற ஒரே பதில்தான அவன் சொன்னுன்.

முதற்பாகம் முற்றிற்று.



★